

# "அப்பா அம்மா செய்யறதெல்லாம் தப்பு தான்.... ஆனால்

"...ஆனால் இந்த விஷயத்தில் அவர்கள் செய்வது சரியான காரியம்தான். அவர்கள் இரண்டு பேருக்குமே பாங்க் ஆஃப் பரோடாவில் கணக்கு இருக்கிறது. எனக்கு பதினாறு வயதானதும் நானும் ஒரு கணக்கு வைத்துக்கொள்ளலாம் என்கிறார்கள். நானே பணம் போட்டு வாங்கலாம். அதோடு 4% வட்டியும் கிடைக்கும். அதுவரை என் சிறு உண்டிப்பெட்டியை நான் நிரப்பிவருகிறேன்..."

இன்றைய மக்கள், எத்தனையோ வகை தொழில்புரியும் மக்கள், பாங்க் ஆஃப் பரோடாவில் கணக்கு வைத்துக்கொள்கிறார்கள். (அவர்கள் அதையே பயன்படுத்த காரணங்கள் என்ன? அந்த பாங்கு நவீன வசதிகளுடன் சீரான முறையில் நடைபெறுகிறது; மக்கள் ஆலோசனை பெற அங்கே போகலாம். அங்கே உதவி கிடைக்கிறது என்பதும், அங்கு அவர்களை கவனித்துப் பணிபுரிகிறார்கள் என்பதும் பொதுஜனங்களுக்குத் தெரியும்). ஆம், பாங்க் ஆஃப் பரோடா ஒவ்வொரு வாடிக்கைக்காரரின் தேவையையும் உணர்ந்து சேவை செய்கிறது. எனக்கும் கூட.

மதராஸ் ராஜ்யத்தில் எங்களுக்கு கோயம்பத்தூர், லால்குடி, மணச்சநல்லூர், தஞ்சாவூர், திருச்சிராபபள்ளி, இவ்விடங்களிலும், மதராஸ் தலைநகரில், நார்த் பீச் ரோடு (முக்கிய கிளைக் காரியாலயம்), எரபாலு செட்டி தெரு, மைலாபூர், தியாகராயநகர், அம்பத்தூர், மௌண்ட் ரோடு, இவ்விடங்களிலும் கிளைகள் உள்ளன.

**மைனர் கணக்கு**

**பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்**
(ஸ்தாபிதம்: 1908)
தலைமை ஆபீஸ்: பரோடா

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற தலைப்பில் எங்கள் பல்வேறுவகைப் பணிகளை விளக்கும் இலவச வெளியீட்டைக் கேட்டுப் பெறுங்கள்

JWT 88-3403

# பொருளடக்கம்

விசுவாவசு ஆடி 3 ○ ஜூலை 18



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# கல்கி



நீங்கள் வரிப்புலியின்
வரிகளை அழிக்கவேண்டு
மென்கிறீர்கள். ஆனால் வரி
போனபின் காங்கிரஸ்
ஒரு புலியாகவேயிராமல்
சாது மிருகமாகி
விடுமே!
லைசென்ஸ்
பெர்மிட்
கோட்டா
லைசென்ஸ்
பெர்மிட்
கோட்டா
லைசென்ஸ்
பெர்மிட்
கோட்டா
லைசென்ஸ்
உணவுக்
கொள்கை
ராஜ்ய
சர்க்கார்
மத்திய
சர்க்கார்
சண்டை
இருக்கட்டும்!
பாத்திரத்தில்
உணவு
இருக்கிறதா,
பாருங்கள்!
PK



மலர் 24 ★ இதழ் 51

# ஒரு முக்கியமான அறிவிப்பு

'கல்கி'ப் பத்திரிகை அவ்வப்போது நாட்டு நடப்பில் முக்கியத்துவம் பெறும் பல பிரச்னைகளில் வாசகர்களின் கருத்தைத் திரட்டித் தந்தும், அறிஞர்களைக் கொண்டு கருத்தரங்கு நடத்தியும் அருந்தொண்டாற்றி வந்திருக்கிறது.

இவை எல்லாவற்றுக்கும் சிகரம் போல், 'ஆங்கிலம் ஏன் வேண்டும்?' என்பது பற்றி, மொழிப் பிரச்னையால் வெகுவாகப் பாதிக்கப்படுவோரும், இதன் பலாபலன்களை நன்கு சீர்தூக்கிப் பார்க்க அறிந்தோருமான மாணவர்களின் கருத்துக்களை வாசகர்களுக்கு ஆக்கித் தர வேண்டும் என உத்தேசித்திருந்தோம். இது பற்றிய அறிவிப்பைச் சென்ற மூன்று 'கல்கி' இதழ்களில் வாசகர்கள் கவனித்திருப்பார்கள். அவர்கள் எவ்வளவு ஆர்வத்தோடு கவனித்து வருகிறார்கள் என்பதற்கு, ஒவ்வொரு தபாலிலும் நமக்கு மாணவர்களிடமிருந்து வந்து குவியும் கடிதங்களே சான்று.

இக்கடிதங்களைக் காணக் காண நமது மாணவர்களின் விவேகத்தையும், மொழியாற்றலையும் குறித்துப் பெருமகிழ்வு அடைந்தோம். இவர்களைப் பிறர் பாட்டுக்குத் தாளம் போடுபவர்களாகவும், ஏமாளிகளாகவும் கருதும் அரசாங்கத்தின் அறிவீனத்தையும் உணர்ந்தோம். இன்றைய மாணவர்கள் தேர்தல்களில் பங்கு பெறும் எதிர்காலத்திலேனும் அரசாங்கம் உருப்படும் என்று மனநிறைவு அடைந்தோம்.

ஆனால் துரதிருஷ்டவசமாக நாம் மனக்குறைப் படுமாறு சூழ்நிலை மாறி வருவதைக் காண்கிறோம். மாணவர்களிடமிருந்து கடிதம் வருவது மட்டுமின்றி, அவர்களுடைய பெற்றோரிடமிருந்தும் கடிதம் வரலாயிற்று. 'என் மகனின் கடிதத்தைப் பிரசுரித்து விடாதீர்கள். அதனால் அவனுக்கு ஆபத்து நேரிடும்' என்றெழுதும் பெற்றோரின் கடிதத்தைக் கண்டதும் திடுக்கிட்டோம். இந்நாட்டில் 'ஜனநாயகம்' இவ்வளவு கேலிக் கூத்தாகி விட்டதா என்று துயருற்றோம். ஆசிரியர்களும் மற்றோரும் மொழித் திட்டத்தை ஆதரிக்காவிடில், அது தேசத் துரோகம் என்பதுபோல் சமீபத்தில் ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் மிரட்டியதிலிருந்து இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

பெற்றோரின் பயம் ஆதாரமற்றதல்ல என்பதற்குக் கல்வி நிலையங்களிலிருந்து சான்று கிடைத்து வருகிறது. ஆகஸ்ட் பதினைந்தாம் தேதியை ஒட்டி மொழிக் கிளர்ச்சிகள் எதிர்பார்க்கப்படுவதாகவும், எனவே கல்வி நிலைய நிர்வாகிகள் மாணவர்களை மிகவும் கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும் என்றும் நேரடியாகவும் மறைமுகமாகவும் தாக்கீது பிறப்பிக்கப்பட்டிருப்பதாக அறிகிறோம்.

மக்களின் நியாயமான உணர்ச்சிகள் வெளிப்படுவதற்கு இடமளித்து, அவற்றை மதித்துப் புத்திசாலித்தனமாக நடவடிக்கை எடுப்பதுதான் கிளர்ச்சிகள் நேராமல் தடுக்கும் வழி என்பதையும், கருத்துச் சுதந்திரத்தை அடக்கி ஒடுக்குவதால் மனக் கசப்பு மேலும் அதிகமாகத்தான் செய்யும் என்பதையும் அரசாங்கம் இன்னமும் உணராதது மிகவும் வருந்தத்தக்கது.

வியட்நாம் போர் குறித்து அமெரிக்க ஜனாதிபதி எடுத்து வரும் நடவடிக்கைக்கு அமெரிக்காவில் எவ்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

வளவோ எதிர்ப்பு உள்ளது. சில கல்லூரி மாணவர்கள் இதனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறார்கள். அரசாங்கத்தின் பிரதிநிதிகள் இக்கல்லூரிகளுக்கே வந்து, அவர்களுக்குக் கறுப்புக் கொடி பிடிக்கிற மாணவர்களிடமே சுமுகமாக நடந்துகொண்டு, அவர்களோடு அமர்ந்து நல்ல முறையில் தமது திட்டத்தை விளக்குகிறார்களாம். இங்கே நம் நாட்டிலோ ஜனநாயக வாடையே இல்லாத நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. பத்திரிகையில் எழுதுவதும் தேசத் துரோகத்துக்குச் சமம் எனச் சர்க்கார் நினைக்குமோ என்றுகூட அஞ்ச வேண்டியுள்ளது.

'பழி வாங்க வேண்டும்' என்ற துர் எண்ணத்தில் சர்க்கார் முனைந்து விட்டது என்று பெற்றோர்கள் பயந்து நடுங்கும் சூழ்நிலையில், மாணவர்களை எவ்வித இன்னலுக்கும் ஆளாக்க நாம் விரும்பவில்லை. மாணவர்களின் நலனுக்கு உதவும் என்று தொடங்கிய திட்டத்தினால் அதற்கு நேர்மாறான விளைவை ஏற்படுத்த நாம் மனம் கொள்ளவில்லை.

மாணவர்கள் வாயிலாக அல்லாவிடினும் ஆங்கிலமே நீடிக்க வேண்டும் என்ற கருத்தைக் 'கல்கி' எடுத்துக் காட்டிவரும்; மாணவர்களின் நலனையும் என்றென்றும் கட்டிக் காத்து வரும்.

# என்ன சேதி?

## நகரசபைத் தீர்மானம்

நான் கண்ணை மூடிக் கொண்டால் உலகமே இருண்டு விட்டதாகப் பூனை நினைத்துக் கொள்ளுமாம். இது எவ்வளவு தூரம் உண்மையோ நாம் அறியோம். ஆனால் சென்னை அரசாங்கம் மட்டும் மேற்கூறிப்பிட்ட பூனையின் நிலையில்தான் இருக்கிறது என்று தெளிவாகத் தெரிகிறது.

ஆட்சி மொழி சம்பந்தமாக, அரசாங்கத்தின் கருத்தை எதிர்த்துச் சென்னை நகரசபை ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அதனைச் சென்னை அரசாங்கம் ரத்து செய்து விட்டதாக அறிவித்துள்ளது.

அதனால் அரசாங்கத்தின் கருத்தைச் சென்னை மக்கள், தமிழக மக்கள் ஏற்றுக் கொண்டு விட்டதாக ஆகிவிடுமா? கண்ணை மூடிக் கொண்டாலும் உண்மை உண்மையாகத்தான் இருக்குமே தவிர பொய்யாகாது!

## கூட்டுப் பண்ணை

'கூட்டுப் பண்ணை முறை வெற்றி பெறாது. பெரு நஷ்டத்திலும் கஷ்டத்திலும் தான் முடியும். உழுது பாடுபடும் நிலம் ஒருவனுக்குச் சொந்தம் என்ற உணர்ச்சியிருந்தால்தான் விவசாயம் செழிக்கும். தேசத்தின் விளைவு பெருகும்' என்று ஆறு ஆண்டுகளாகச் சுதந்திரக் கட்சி கூறி வந்திருக்கிறது. அதை இன்று அரசாங்கமே ஒப்புக்கொள்ள நேர்ந்திருக்கிறது.

சென்னை அரசாங்கக் கூட்டுறவு விவசாய போர்டின் கூட்டம் சென்னை முதன்மந்திரியின் தலைமையில் சமீபத்தில் கூடி, கூட்டுப் பண்ணைகளின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டும் என்று மத்திய அரசாங்கம் விடுத்த கோரிக்கையைப் பரிசீலனை செய்ததில் மேற்கண்ட முடிவுக்கு வந்துள்ளது.

இன்று தமிழகத்தில் எழுபது கூட்டுப் பண்ணைகள் இருக்கின்றனவாம். அவற்றில் ஐம்பது, மூன்றாவது திட்ட காலத்தில் தொடங்கப் பெற்றவை. இப்பண்ணைகள் எதிர்பார்த்ததுபோல் திறம்பட வேலை செய்யவில்லை. இதற்குக் காரணம், இப்பண்ணைகளில் வேலை செய்வோரிடம் 'நிலம் தங்களுக்குச் சொந்தம்' என்ற உணர்ச்சி இல்லாததுதான். எனவே இக்கூட்டுப் பண்ணைகளின் தொகையை அதிகரிக்கும் யோசனை கைவிடப்பட்டதாகத் தெரிகிறது.

சுதந்திரக் கட்சி அன்றே சொன்னதைக் கேட்டிருந்தால், பொதுமக்களின் வரிப்பணத்தில் இவ்வளவு காலமாக ஏற்பட்ட பெரு நஷ்டத்தைத் தவிர்த்திருக்கலாம்.

## கோத்தாரியின் எச்சரிக்கை!

“திட்டத்துக்கு ஓய்வு கொடுங்கள்: ஆறு ஏழு ஆண்டுகளுக்குத் திட்டத்தைப் பற்றியே பேசாதீர்கள்!”

இப்படிக் கூறியவர் சுதந்திரக் கட்சியின் செயலாளரான ஸ்ரீ மஸானியல்ல; சென்னை பங்கு மார்க்கெட் சங்கத்தாரின் சென்ற வருடத்திய தலைவர் திரு டி. வி. கோத்தாரிதான்.

“அந்நியச் செலாவணிப் பஞ்சம் மிகக் கடுமையாக இருக்கிறது. முதல் மூன்று திட்டங்களின் செயல் முறையும் திருப்திகரமாக இல்லை. இருப்பினும் பிரதமரும் நிதி மந்திரியும் 22,500 கோடி ரூபாய் முதலீடு செய்ய வேண்டிய நான்காவது திட்டத்துக்கு ஆசி கூறி யிருக்கிறார்கள். இப்போது உண்மையில் செய்ய வேண்டிய அவசியமான காரியமென்னவெனில், இத்திட்டத்தை அப்படியே நிறுத்திவிட்டு, இதுவரை மேற்கொண்ட திட்டப் பணிகளைச் செவ்வனே முடிக்க வேண்டும்.

“பொதுவாகத் தொழில் துறையில் முதலீடு செய்பவர்கள் இனி அந்தப் பக்கமே தலை வைத்துப் படுப்பதில்லை என்ற அளவுக்குப் பின்வாங்கிவிட்டார்கள். தாங்க முடியாத அளவுக்கு வரிப் பளு ஏறிவிட்டதால் நடுத்தர வர்க்கத்தினரும், உயர்தர வர்க்கத்தினரும், சம்பள வர்க்கத்தினரும் யாருமே தொழிலில் முதலீடு செய்யும்படியான நிலையில் இல்லை.

“சென்ற பட்ஜெட்டில் பெயரளவுக்கு அளிக்கப்பட்ட சலுகைகள், முதலீடு செய்யும் வர்க்கத்தாரிடையே யாதொரு நம்பிக்கையையும் ஊட்டவில்லை” என்று கூறியிருக்கிறார்.

நிதி மந்திரி அவர்கள் திரு கோத்தாரியின் பேச்சைச் செவிமடுத்து யாதாயினும் உருப்படியான காரியங்கள் செய்தால்தான் தேசம் இன்றுள்ள பொருளாதார நெருக்கடியிலிருந்து பிழைக்கும்.

# பிரதமருக்கு ஒரு வேண்டுகோள்

**ராஜாஜி**

“அண்டை நாடுகள் ஒன்றோடொன்று எப்போதுமே முரண்பட்டிருப்பது சாத்தியமல்ல. சமாதான முறையிலேயே எல்லாப் பிரச்னைகளையும் தீர்த்துக் கொள்வதுதான் நல்லது” என்று பிரதமர் லால்பகதூர் அவர்கள் நாகபுரியில் இம்மாதம் ஏழாந் தேதி திட்டவட்டமாகச் சொன்னார். இந்தியா – பாகிஸ்தான் உறவு பற்றிய ஒரு மிக முக்கியமான பேச்சு இது. பிரதமர் கூறியதை அவரது மந்திரி சபை சகாக்களும், நிர்வாகத்திலுள்ள அதிகாரிகளும் எப்போதும் மனத்தில் கொண்டு, அதன்பிரகாரமே நடப்பார்களென நம்புகிறேன்.

'சமாதான முறையிலேயே பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்வோம்' என்று பிரதமர் கூறியது 1959, 1960 ஆண்டுகளில் நாம் பாகிஸ்தானுடன் செய்துகொண்ட இரு உடன்படிக்கைகளுக்கு மிகவும் பொருந்தியது. முஸ்லீம் துவேஷம் பாராட்டும் சில அரசியல்வாதிகள், ஹிந்துமதப் பண்புக்கு நன்மை செய்வதாகச் சொல்லிக் கொண்டு பாகிஸ்தானுடன் சமாதானப் பேச்சு நடத்தினாலே சீறி வருகிறார்கள். மேற்படி இரு உடன்படிக்கைகளில், இருநாடுகளும் சமாதான வழியையே பின்பற்றுவதென உறுதியாகக் கூறியிருப்பதையும், உடன்படிக்கைகளை மதித்தால்தான் நம் நாட்டுக்குக் கௌரவம் என்பதையும் இவர்கள் உணர வேண்டும்.

இவ்விஷயத்தில் பிரதமர் தமது விவேகமான நாகபுரி உரையைப் பின்பற்றுவதோடு, மற்றோரையும் அவ்வழியில் நடாத்திச் செல்ல வேண்டும்.

சீனத்தைப் புத்திசாலித்தனத்துடன் எதிர்ப்பதிலும் இதே விவேகத்தைப் பிரதமர் பெற வேண்டும். ராணுவத்துக்காக நாம் பெருத்த செலவு செய்து வருவது வாஸ்தவம். எனினும் உலகத்திலேயே மிகப் பெரிய ராணுவத்தைக் கொண்ட சீனத்தை எதிர்ப்பதற்கு நமது சுயபலம் போதாது என்பது வெளிப்படையான உண்மை. பிறர் பலத்தை நாட வேண்டும் என்னும்போது, சீனத்தின் சகோதர கம்யூனிஸ நாடான ருஷியாவை நாம் நம்புவது எவ்வளவு தவறானது என்பதை ராஜநீதி அறிந்தவர்கள் உணருவார்கள். சீனத்துக்கும் ருஷியாவுக்குமிடையே தற்போதுள்ள பேதத்தைப் பெரிதாக நினைத்து விடக் கூடாது என்று ருஷிய அரசாங்க வெளியீடான **ப்ராவ்தா** அமெரிக்காவுக்கு எச்சரித்திருக்கிறது. இது நமக்கும் செய்த எச்சரிக்கையாகும்.

சீன எதிர்ப்பில் மட்டுமின்றி பாகிஸ்தானுடன் உள்ள பூசல்களிலும் விவேகமான நடவடிக்கை எடுக்க வேண்டும். ஐக்கிய நாடுகள் சபையில் காச்மீர விவாதங்களில் ருஷியா நமக்குச் சாதகமாகவும் பாகிஸ்தானுக்குப் பாதகமாகவும் வோட்டுச் செய்து வருவதைக்கொண்டு, அது பாகிஸ்தானுக்கு எதிராக நமக்கு ராணுவ உதவி அளிக்கும் என்று எதிர்பார்ப்பது சரியல்ல.

சமீபத்தில் ஜெனரல் கரியப்பாவைச் சந்தித்துப் பேசினேன். அவரும் நாம் ருஷியாவை ராணுவ விஷயத்தில் நம்புவது புத்திசாலித்தனமல்ல என்று கருதுகிறார். சுதந்திரமாக அபிப்பிராயம் அளிக்க முடியுமானால் எந்த ராணுவ உயர் அதிகாரியும் இதே கருத்தைத்தான் வெளியிடுவார். ருஷியாவுடனே வேறெந்த நாட்டுடனே நட்புக் கொள்வது நலம்தான். ஆனால் **ராணுவ** உதவியை எதிர்பார்ப்பது அபாயம்.

சர்வநாச ஆயுதங்களை உபயோகிப்பது இரு தரப்புக்களுக்குமே ஆபத்து என்பதை உணர்ந்த ருஷியாவும் அமெரிக்காவும் இன்று ஒன்றோடு ஒன்று ஒத்துப் போவதற்கே முயன்று வருகின்றன. இவ்விரு நாடுகளின் பிரச்னைகளில் நாம் எந்தப் பக்கமும் சேராமல் இருக்கலாம். எனினும் அரசியல் அறிவுடன் நமது பிரச்னையை நோக்கினால், ருஷியா — அமெரிக்கா இவற்றின் அடிப்படையில் உள்ள மாறுபாட்டையும், நமது சிக்கலில் அமெரிக்காதான் மனப்பூர்வமாக உதவ முடியும் என்பதையும் காண்போம். அமெரிக்கத் துவேஷமும், ருஷிய நேசமும் தான் 'தடஸ்த'க் கொள்கை என்று எண்ணிக் குழப்பிக் கொள்ளக் கூடாது. காலனிகளுக்கெல்லாம் சுதந்திரம் கொடுத்துவிட்டு வெளியேறிய பிரிட்டனிடம் இன்னமும் நாம் வெறுப்புக் காட்டுவது அழகல்ல. தீயே எரிந்து போய்விட்டபின், விளக்குகளில் நாம் எண்ணெய் விட்டுக் கொண்டிருப்பது பொருளற்ற காரியம். தடஸ்த மந்திரமும், அதன் தவறான விளைவாக ருஷியாவை நம்பி அமெரிக்காவைத் துவேஷிப்பதும் சீனத்தை எதிர்ப்பதற்கு அணுவளவும் பயன்படாது.

ஆசியாவுக்குள் ஒரு வலுவான ராணுவ அமைப்பை ஏற்படுத்திச் சீனத்தின் ஆக்கிரமிப்பு முயற்சிகளைத் தடுக்க வேண்டும். இதற்காக ஜப்பானுடன் உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும். நமது பிரதமர் அவர்கள் ஜப்பானியப் பிரதமர் ஸாடோவுடன் இவ்விஷயமாக ஆலோசனை நடத்துவதற்கென்று ஒரு திறமையுள்ள தூதுகோஷ்டியை அனுப்பி வைப்பாராயின், அது 500 கோடி ரூபாய்க்கு அந்நிய தளவாடம் வாங்குவதற்கு ஒப்பாகும். இந்த யோசனையை நான் இதயபூர்வமாகச் சொல்லுகிறேன். சர்க்காரின் பொருளாதாரக் கொள்கையை நான் எதிர்க்கிறேன் என்ற காரணத்துக்காக இந்த யோசனையை நிராகரிக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஜனாதிபதி ஜான்ஸனுக்கு அமெரிக்காவிலேயே எதிர்ப்பு ஏற்பட்டிருப்பதாக இது வரை பார்த்து வந்தோம். இப்போதோ அவருக்கு எதிர்க்கட்சித் தலைவர்கள்கூட ஆதரவு அளிப்பதைக் காண்கிறோம். அமெரிக்காவின் பிரபல பத்திரிகையொன்று பின்வருமாறு கூறுகிறது:

'இந்த நூற்றாண்டில் ஜனாதிபதி மாளிகை கண்ட மிகவும் திறமையுள்ள அரசியல்வாதி ஜான்ஸனே' என்று நிக்ஸன் கூறியிருப்பது சாமானியமான பாராட்டுதல் அல்ல. ஜனாதிபதி தேர்தலுக்கு ஜான்ஸனை எதிர்த்துப் போட்டியிட்ட பாரி கோல்ட்வாட்டர் தமது கொள்கைகளையே ஜான்ஸனின் நிருவாகம் அமுல்படுத்துவதாகக் கூறியுள்ளார். '1964-ம் ஆண்டு தேர்தல் பிரசாரத்தில் குடியரசுக் கட்சி எந்த வெளிநாட்டுக் கொள்கையை வெளியிட்டதோ அதைத்தான் ஜான்ஸன் ஸ்திரமாகப் பின்பற்றத் தொடங்கியிருக்கிறார்' என்று கோல்ட்வாட்டர் கூறுகிறார்.

***

கல்விக் கமிஷன் காரியதரிசி ஸ்ரீ ஜே. பி. நாயக் அவர்கள் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையில் பல அரிய உண்மைகளைக் காண்கிறோம் :

''இந்தியாவில் மிகவும் அதிகமான மக்கள் ஆங்கிலத்தையே துணை மொழியாகக் கற்றிருக்கிறார்கள். ஹிந்தியைத் துணை மொழியாக அறிந்தோரைவிட ஆங்கிலத்தைத் துணை மொழியாக அறிந்தோரே அதிகம்'' என்று இவ்வறிக்கை கூறுகிறது. 110 லட்சம் மக்கள் ஆங்கிலத்தைத் துணை மொழியாக அறிந்திருக்கிறார்கள்; 93 லட்சம் மக்கள்தான் ஹிந்தியைத் துணை மொழியாக அறிந்திருப்பவர்கள்.

இதிலுள்ள மிகவும் முக்கியமான உண்மை, ஆங்கிலத்தை அறிந்திருப்பவர்கள் நாடு முழுவதிலும் சமமாகப் பரவியிருக்கிறார்கள் என்பதும், வட இந்தியாவிலுள்ள ஹிந்திப் பகுதிகளில் மட்டுமே அம்மொழியைத் 'தாய் மொழியாகவும், துணை மொழியாகவும் கொண்ட மக்கள் குவிந்திருக்கிறார்கள் என்பதுமாகும். இவ்வுண்மையை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். ஹிந்தி வழங்காத பகுதிகளில் ஹிந்தி அறிந்தவர்கள் மிகவும் குறைவாகவே வாழுகிறார்கள். ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவரன்றி, ஏனைய மக்களில் வெகு குறைந்த சதவிகிதத்தினரே அம்மொழியைப் பயின்றிருக்கிறார்கள். நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியில் மட்டுமே அடக்கமாயுள்ளோரும், மொத்த மக்கட்தொகையில் முப்பதே சதவிகிதத்தினருமான ஹிந்தியரின் தாய்மொழியை அகில தேசமொழியாக்குவது எந்த நீதிக்கும் பொருந்தாது. இந்த உண்மையை ஹிந்தியருக்கு உணர்த்தி, முக்கிய ஆட்சி மொழியாக ஆங்கிலமே நீடிப்பதற்கு அவர்களது ஒப்புதலைப் பெற்றுத் தர பிரதமர் அவர்கள் முயற்சி எடுப்பாராயின் ஒரு முக்கியமான பிரச்னையை நியாயமாகவும், திருப்திகரமாகவும், அமைதியாகவும் தீர்த்து வைத்த பெருமை அவருக்குக் கிடைக்கும். எல்லைப் பிரச்னையிலும், பொருளாதாரப் பிரச்னையிலும் நாடு தனது முழு கவனத்தையும் திருப்ப வேண்டுமாயின் இதுவே இன்று செய்ய வேண்டிய காரியம்.

இன்னின்ன மொழி நாட்டில் இன்னின்ன சதவிகிதம் வழங்குகிறது என்பதற்கு ஸ்ரீ நாயக் தந்துள்ள புள்ளி விவரம் வருமாறு:

ஹிந்தி: 30.4; தெலுங்கு: 8.6; வங்காளி: 7.7; மராத்தி: 7.6; தமிழ்: 7.0; உருது: 5.3; குஜராத்தி: 4.6; கன்னடம்: 4.0; மலையாளம்: 3.9; ஒரியா: 3.6; பஞ்சாபி: 2.5; அஸ்ஸாமிய மொழி: 1.6; காச்மீரி: 0.4; மற்ற மொழிகள்: 12.8.

இந்தியாவின் மொத்த மக்கட் தொகை 43 கோடியே 90 லட்சம்.

***

சமூக அபிவிருத்தி என்று நினைத்துக் கொண்டு என்றோ வரப் போகும் எதிர்காலத்துக்காக ஏராளமான செலவில் திட்டம் போடுவது; அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் நிர்வாகத்துக்கும், உத்தியோகப் படைக்கும் ஏராளமாகச் செலவிடுவது; தொழில் துறையில் டம்பாச்சாரி இனங்களைப் பெருக்குவது; சட்டப்படி சொத்துக்களை ஆண்டு அநுபவித்து வருவோரிடமிருந்து அவற்றைப் பறிப்பது; மூலதனம் இல்லாதவருக்கு நிலத்தைப் பிடுங்கித் தந்து தானிய உற்பத்தியைக் குறைப்பது (வோட் உற்பத்தியை மட்டும் இதனால் அதிகரிப்பது); ஒரு தேசத்துக்கு எதிராக இன்னொரு தேசத்தைக் காட்டித் தகிடுதத்தம் செய்து எல்லா அந்நிய நாடுகளிடமிருந்தும் பெரும் கடன்கள் பெறுவது— இவைதான் சோஷலிஸத்தின் அங்கங்கள். உற்பத்திக்கு உதவும் இயற்கையான எல்லா உற்சாகங்களையும் அழித்து, அதிகார வர்க்கத்தின் கட்டுப்பாட்டாலும், கொடுமையாலும் பொருளாதாரத்தை உருவாக்க எண்ணுவதே நாம் காண்கிற சோஷலிஸம்.

இந்த சோஷலிஸத்தின் விளைவுதான், 'அந்நியச் செலாவணிச் சிக்கல்' என்று வர்ணிக்கப்படுகிறது. 'திவாலா நிலைமை' என்பதற்கே இப்படி மறு பெயர் தந்திருக்கிறார்கள். 'அந்நியச் செலாவணிச் சிக்கல்' காரணமாக அவசியமான இறக்குமதிகளைத் தடுத்திருக்கிறார்கள். இதனால் தனியார் துறைத் தொழில்கள் எல்லாம் மந்தம் அடைந்திருக்கின்றன. சிக்கலைத் தீர்ப்பதற்காக அந்நிய நாடுகளிலிருந்து மேலும் பெரும் கடன்கள் பெற முயற்சி நடக்கிறது. ஒருவருக்குப் பழைய கடனைத் திருப்பித் தருவதற்காக அவரிடமிருந்தே புதுக் கடன் வாங்கினால் இதை யாருமே நாணயமான முறையாக நினைக்க மாட்டார்கள். என்றாலும் இத்தகைய புத்தியற்ற முறையில் வாங்கும் அந்நியக் கடன்களை நம்பியே இன்று நாட்

டுப் பொருளாதாரம் உருவாக்கப்படுகிறது. கடன் தரும் அன்னிய நாட்டாரின் தயவை எதிர்பார்த்து வாழுவதுதான் சோஷலிஸமா? ஆட்சியிலுள்ளவர்கள் தங்களது தவற்றின் விளைவிலிருந்து தப்ப நினைத்து அவமானகரமான, பயங்கரமான முறையில் உடனடிப் பிரச்னைகளிலிருந்து விலகி ஓடுவதே இன்று நாம் காணும் நிலை. இருந்த போதிலும் இன்னமும் சில நாடுகள் நம்மிடம் பொறுமையும், நட்பும் காட்டி வருவதாலேயே நாம் முற்றிலும் மானபங்கம் அடையாமல் இருந்து வருகிறோம். அந்நாடுகள் பெருந்தன்மையுடன் நடக்காவிடில் உள்நாட்டு விவகாரத்திலும் சரி, அந்நிய விவகாரத்திலும் சரி இந்தியா எப்போதோ தலைக்குப்புற விழுந்திருக்கும். ஆனால் இவ்வாறு உதவும் நட்பு நாடுகளுக்கு விரோதமாக நம் மக்களின் உணர்ச்சியைத் தூண்டிவிடும் பிரகிருதிகளும் இந்நாட்டில் இருப்பது துரதிருஷ்டம்!

ஃஃஃ

தியாஸாஃபிகல் சொஸைட்டியின் தலைமை ஸ்தாபனம் சென்னையில் இருக்கிறது. 1882ம் ஆண்டிலும் 1907-லுமாக இதற்கு 260 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டு அங்கு ஸ்தாபனம் நடந்து வருகிறது. லாபமெடுக்கும் வியாபாரமாக இன்றி, தரும ஸ்தாபனமாக நடைபெற்று வரும் இந்தச் சங்கத்தின் நிலத்துக்குப் பெரியதொரு நகரப்புற நில வரி விதித்து, அதன் வேலை முறைக்குக் குந்தகம் செய்திருப்பது அதருமம். சொஸைட்டியினர் வாங்கிய போது நகரத்துக்கு வெளியேயிருந்த ஒரு நிலப் பரப்புக்கு இப்போது ஆண்டொன்றுக்கு ரூ. 50,000 வரி விதித்திருக்கிறார்கள். ஏற்கனவே நகர சபைச் சொத்து வரியாக ரூ. 17,000 செலுத்தப்படுகிறது. இந்நிலையில் சொஸைட்டியைத் தொடர்ந்து நடத்துவது சிரமம்.

இதற்குச் சட்டப்படி விலக்களித்து ஸ்தாபகியான ஸ்ரீமதி அன்னி பெஸண்ட் அம்மைக்கு மரியாதை தெரிவிப்பதே யுக்தம். சமூக, சமய, அரசியல் துறைகளில் இந்தியா முன்னேற வேண்டுமென்பதற்காக அரும்பாடுபட்ட பெஸண்ட் அம்மையின் ஞாபகார்த்தமாக தியாஸாஃபிகல் சொஸைட்டிபேரில் இந்தவரியைச் சுமத்தாமல் விதிவிலக்கு உத்தரவு பிறப்பிப்பது நியாயம்.

ஃஃஃ

சீனா அணு ஆயுத சோதனை செய்வதால் இந்தியாவின் சூழலில் மக்களின் சுகாதாரத்தைப் பாதிக்கும் விஷம் கலந்துவிட்டது. காச்மீரத்திலிருந்து கிடைத்துள்ள கதிரியக்க அறிக்கையிலிருந்து இவ்வுண்மை தெரிகிறது. சீனா எந்த நாகரிக உடன்பாட்டுக்கும் உட்படாத தனி நாடாக இருப்பதால், அதனை யாரும் கட்டுப்படுத்துவதற்கில்லை. பல ஆண்டுகளாகத் தொடர்ந்து ஆயுதசோதனை நடத்தியுள்ள அமெரிக்காவும் ருஷியாவும் இவ்விஷயத்தில் தலையிடுவதற்குத் தகுதி பெற்றிருக்கவில்லை. இவ்விரு வல்லரசுகளும் தங்களது குற்றத்தைத் தாமே ஒப்புக் கொண்டு, தாங்கள் செய்த தவற்றை மற்றவரும் செய்வதால் அது சரியாகி விடாது என்று வெளிப்படக் கூறவேண்டும்.

ஃஃஃ

நம் நாட்டின் வரப்போகும் தலைமுறையினர் தங்களுக்காக இன்றைய சர்க்கார் இழைத்து வரும் உற்பாதத்தை முன்கூட்டியே அறிய முடியுமானால் சம்பந்திய நடவடிக்கைகளைக் குறித்துப் பெரிதும் விசனம் அடைய வேண்டியிருக்கும். குடும்பக் கட்டுப்பாட்டுக்காக 90 கோடி ரூபாயும், டெலிவிஷனுக்காக 100 கோடி ரூபாயும் ஒதுக்கி, இதற்கேற்ப அந்நிய தேசங்களிலிருந்து கடன் வாங்குவது சர்க்காரின் புதிய திட்டம். இந்த நிலையில், கடனாளியான இந்தியா ஆப்பிரிக்காவிலும், மற்ற பகுதிகளிலுமுள்ள பின்தங்கிய நாடுகளுக்கு நிதி உதவி செய்ய முற்பட்டிருப்பது அற்புதமாகும். நிதிக் கணக்குப் பார்க்கும் பழங்கால மனிதர்களுக்கு இது புதிராக இருக்கும். ஆனால் திவாலாகி விடுவது என்று தீர்மானமாக முடிவெடுத்தவர்கள் எதையும் செய்வார்கள்!

ஃஃஃ

அநுபவமுள்ள தொழிலதிபர்களுடன் சர்க்கார் மனம் விட்டுப் பேசி உற்பத்தி உயர்வுக்கு வழி காண வேண்டும். தற்போதுள்ள தொழிலகங்களின் முழுச் சக்தியையும் எப்படிப் பயனாக்கிக் கொள்வது, அவற்றை விஸ்தரிப்பது எங்ஙனம், அந்நிய மூலதனம் நம் நாட்டுக்குக் கிடைக்க வழி என்ன, அவசியமான கச்சாப் பொருட்களை இறக்குமதி செய்வதற்கு உபாயம் எது என்பனதெல்லாம் தனியாருடன் நன்கு ஆலோசித்தே அரசாங்கம் முடிவு எடுக்க வேண்டும். தொழில் செய்து நடைமுறை அநுபவம் பெற்ற நிர்வாகிகளிடமிருந்து தொழில் நுணுக்கங்களைக் கற்றுக் கொள்வதற்கு அரசாங்கம் தயங்கக் கூடாது. அரசாங்கமும் தொழில் அதிபர்களும் இணைந்து மனம் விட்டுச் செயலாற்றினால் தான் பொருளாதாரம் முன்னேற்றம் அடையும். இக்கருத்துக்களை 'ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்' பத்திரிகை ஆதரித்து எழுதியிருப்பதை அரசாங்கம் கவனிக்க வேண்டும்.

ஃஃஃ

அடியில் கண்டுள்ள தந்தியை அப்படியே வாசகர்களுக்கு முன் வைப்பது தவிர அது பற்றி விமரிசிப்பதற்கு எதுவுமில்லை.

''ஷேக் அப்துல்லா சாகேபையும், பேக் சாகேபையும் தனித் தனி இடங்களில் வைப்பதென உள்நாட்டு மந்திரி இலாகா முடிவு செய்திருப்பதாகப் பத்திரிகை அறிக்கைகள் கூறுகின்றன. இவ்வாறு தன்னந் தனியாகச் சிறை வைப்பது மனிதத்தன்மையற்ற சித்திரவதையாகும். ஷேக், பேக் இருவரும் முதியவர்கள்; உடல் நலம் குன்றியவர்கள். இவர்கள் சட்டப்படி பரிகாரம் தேடுவதற்கும் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு பிளவை அதிகப்படுத்திக் கொண்டேயிருப்பதால் தீர்வு கிடைக்க வழியே இல்லை. உங்கள் (ராஜாஜியின்) தலையீட்டை வற்புறுத்துகிறோம். —மிருதுளா''




அத்தியாயம் 17

## அத்தானுக்குப் பிடித்தது!

"தம்பி! இன்னைக்கு ராத்திரி செல்லம்தான் சமையல் செய்யப் போகுதாம்! அதனால் உனக்கு என்ன ரொம்பவும் பிடிக்கும் என்று கேட்டுப் போக உன் அத்தை வந்திருக்கிறாள்" என்றார் சபாபதி முன் வாசலுக்கு வந்து. திண்ணையில் உட்கார்ந்து 'பிரிட்டனின் தொழில் வளம்' பற்றிய ஓர் ஆங்கில நூலைப் படித்துக் கொண்டிருந்த தங்கப்பன், திரும்பி நிலைப்படியருகே நின்றிருந்த சொர்ணத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

"வாஸ்தவம்தானா அத்தை ?"

"அத்தானுக்குப் பிடிச்சதா பண்ணிப் போடணும்னு செல்லம் ஆசைப் படுது. தாமரையை விசாரிச்சதுக்கு, 'ஏன் அவளையே போய்க் கேட்டுக்கிட்டு வாயேன்; நாலு வருஷமா பட்டணத்திலே இருந்துட்டு வந்திருக்கிறான். அவன் ருசி எப்படி மாறியிருக்குமோ, யார் கண்டது? இங்கே இருந்தவரைக்கும் நான் அவனுக்கு வெங்காயத்தைப் பொடிசா நறுக்கித் தூவிய பழைய சோற்றைத்தான் விசேஷமா போட்டிருக்கிறேன்'னுட்டான் !"

இதைக் கூறி விட்டு நமட்டுப் புன்னகை புரிந்தாள் சொர்ணம். சபாபதியும் வாய் விட்டுச் சிரித்தார் விஷமத்தனமாக.

'ஆகா! அந்தப் பழைய சோற்றுக்குத்தான் என்ன ருசி !' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் தங்கப்பன். அதை நினைக்கும் போதே அவனுக்கு நாவில் ஜலம் ஊறியது. 'பட்டணத்து வாசிகளுக்குப் பழைய சோறு என்றால் பரிகாசமாகத்தான் இருக்கும்!'

"எனக்குப் பிடிச்சதைச் செல்லம் பண்ணிப் போடுவாளா அத்தை? நெசமாத்தானா?"

"பின்னே எதுக்காக வந்து கேட்கிறேனாம்?"

"அப்படியானால் சரி, சொல்கிறேன். வேணுமானால் பேப்பர், பென்சில் கொண்டாந்து குறிச்சுக்கிடுங்க ! அயிட்டம் ஒண்ணு, பிஷ் புலாவ்—ஆஹாமட்டர் !"

"என்னாது?"

"அயிட்டம், ரெண்டு வெஜிடபிள் ஹாம்பர்கர் — ஸாஸ்!"

"ஒண்ணுமே விளங்கலியே தம்பி, நீ சொல்றது !"

"அயிட்டம் மூணு, வெஜிடபிள் ஆம்லெட்!"

"என்னமோ வாயிலே நுழையாத பேரெல்லாம் சொல்லிக்கிட்டே போறியே, தம்பி!"

"பேரு நுழையாட்டா என்ன? இதையெல்லாம் நல்லபடியா தயாரிச்சு வைச்சுட்டா, 'லபக் லபக்'குன்னு வாய்க்குள்ளே நுழைஞ்சு வயிற்றுக்குள்ளே போயிடும். கண் மூடித் திறக்கிற நேரத்திலே தட்டு காலியாகிடும்!"

"இன்ன பொரியல், இன்ன கூட்டுன்னு சொல்லு தம்பி!" என்றாள் சொர்ணம் அழாக் குறையாக.

"பூ! இவ்வளவுதானா அத்தை ? பிறந்த நாளிலேயிருந்து பட்டணத்து நாகரிகத்திலேயே மூழ்கியிருக்கிறாள் செல்லம் ; அவளுக்கு ஹாம்பர்கர் தயாரிக்கத் தெரியாதா?"

தங்கப்பன் ஒரே ஒரு நாள் சென்னையில் அதி நவீன ஹோட்டல் ஒன்றுக்குச் சென்றான். அங்கே மரக்கறி உணவு வகைகள் மட்டும்தான் கிடைக்குமென்றாலும் பல நூதனப் பணியாரங்களுக்கு மேனாட்டுப் பாணிப் பெயர்கள் சூட்டப்பட்டிருப்பதைக் கண்டு தனக்குள் சிரித்துக் கொண்டான். அங்கு கிடைக்கும் உணவு வகைகளுக்கான டைப் செய்யப்பட்ட பட்டியலொன்றை அவனிடம் நீட்டினார் அங்கு பணியாற்றும் ஒருவர். அவனுக்குத் தேவையானதை எழுதிக் கொண்டு போனார். எல்லாம் மிகவும் சுத்தமாக இருப்பதுடன் ருசியாகவும் உள்ளனவே என்று நினைத்துக் கொண்ட தங்கப்பனுக்கு, இறுதியில் ஒரு தட்டில் வைத்து மரியாதையாகத் தரப்பட்ட பில்லைப் பார்த்ததும் தலை சுற்றி மயக்கம் வந்து விடும் போலிருந்தது.



'மரியாதை' வாங்க மரியாதை காட்டினார்கள் அங்கே! 'டிப்ஸ்' என்ற பெயரில் பில் தொகையில் ஓர் ஐந்து சதவிகிதத்தையும் சேர்த்துத் தட்டில் வைத்துவிட்டு வெளியேறிய தங்கப்பன் 'ஏதோ ஆசைக்கு ஒரு நாள் இங்கே வந்தாகி விட்டது; இனிமேல் நமக்கு உடுப்பி மசால் தோசையே போதும்' என்ற முடிவுக்கு வந்தான்! எனினும், அந்த ஒரு வேளை அநுபவம் இன்று இங்கு பயன்பட்டது அவனுக்கு.

''பொரியலும் கூட்டும் தானென்றால் அதுக்கு என்னைக் கேட்பானேன், அத்தை? எது தோணுதோ செய்யுங்க. எனக்கு எல்லாமே பிடிக்கும் தான்!'' என்று கூறி அனுப்பி விட்டான் சொர்ணத்தை.

அவன் மாமா தம் முகம் தெரியாதவாறு அன்றையத் தினசரியில் மூழ்கி விட்டிருந்தார் அப்போது!

''என்ன தங்கப்பா! சாப்பாட்டு விஷயம் தீர்மானமாகிறாப் போல இருக்குது; சரியான சமயத்திலே தான் வந்திருக்கிறேன் நான்!'' என்று தெருப் பக்கத்திலே இருந்து பேச்சொலி கேட்டது.

தாயின் குரலைச் செவியுற்றதும் பாயும் கன்று போல் துள்ளி ஓடினான் தங்கப்பன். வீதியிலேயே மாருதியின் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டான். ''வாங்க ஸார்! வாங்க!'' என்று வீட்டினுள்ளே அழைத்துப் போய் முற்றத்தினருகே இருந்த ஒரு பழைய சாய்மான நாற்காலியில் அமரச் செய்தான். ''ஊர் திரும்பியதும் முதல் வேலையா வீட்டுக்குத்தான் வந்தேன். மகளைப் பார்த்து வரக் கோயமுத்தூர் வரை நீங்க போயிருப்பதாகப் பக்கத்து வீட்டுக்காரங்க சொன்னாங்க. மாப்பிள்ளை, மகள் எல்லாரும் சௌக்கியம்தானே? எத்தனை குழந்தைகள் அவங்களுக்கு?'' என்றெல்லாம் விசாரித்தான். அச்சமயம், 'தங்கப்பன் இத்தனை அடக்கத்துடனும் ஆர்வத்துடனும் வரவேற்று உபசரிக்கும் இவர் யார்?'

என்று தெரிந்து கொள்ளும் ஆவலுடன் சபாபதியும் அங்கு வந்து ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டார்.

''இவர் என் மாமா சபாபதி. சென்னையில் 'ரெவின்யூ டிபார்ட்மெண்டி'லே 'ஸ்டெனோ' உத்தியோகம் பார்த்துக்கிட்டிருக்கிறார்'' என்று அறிமுகம் செய்து வைத்தான் தங்கப்பன். ''நான் பள்ளிக்கூடத்திலும் காலேஜிலும் எத்தனையோ பேர்களிடம் பாடம் கற்றுக்கிட்டேன், மாமா! ஆனால் நம்ம குடும்பத்துக்கே ஒரு குரு ஸ்தானத்தில் நாம் ஏற்றுக்கிடக்கூடியவர் மாருதி ஸார்தான்!''

''அப்படியா?'' என்று வியந்து மகிழ்ந்தார் சபாபதி. ''ஏற்கனவே இரண்டு மூணு தடவை நான் சத்தியபுரிக்கு வந்து போயிருக்கிறேன்; இருந்தாலும் உங்களைச் சந்திக்கிற வாய்ப்பு இம்முறைதான் கிடைச்சிருக்கு; ரொம்ப சந்தோஷம்'' என்றார்.

''தாகத்துக்கு ஏதாவது கொண்டு வரட்டுமா?'' என்று விசாரித்தான் தங்கப்பன். ''காப்பி, டீ, எலுமிச்சம் பழ சர்பத்......''

''அம்மாவைக் கேட்டு ஒரு தம்பளர் மோர் வாங்கிக்கிட்டு வா, தம்பி!''

''நான் சொல்லிட்டு வரேன்; நீங்க பேசிக்கிட்டு இருங்க'' என்று சபாபதி எழுந்தார். ''செல்லம்!'' என்று அழைத்துக் கொண்டே பின்கட்டுக்குப் போனார். அவளிடம் மோர் கொணருமாறு கூறிவிட்டு இரவுச் சாப்பாட்டுக்கு ஓர் ஆள் அதிகம் என்பதையும் தெரியப்படுத்தி விட்டுத் திரும்புவதற்குள் தங்கப்பன் மாருதியிடம் மேலும் பலப்பல



கேள்விகளைத் தொடுத்து அவரைத் திணறச் செய்தான்.

''கொஞ்சம் நிதானிச்சுக்க தங்கப்பா! ரெண்டு மூணு வருஷத்துச் சமாசாரமெல்லாம் மள மளன்னு கொட்டித் தீர்த்துட முடியுமா? இப்படிக் கேள்வி மேல் கேள்வியா அடுக்கினால் நான் எதுக்குன்னு உனக்குப் பதில் சொல்வேன்?''

''இன்னும் கேட்க வேண்டியது எவ்வளவோ பாக்கி இருக்கிறதே!'' என்றான் தங்கப்பன். ''ஷண்முகம் வாத்தியார் எப்படி இருக்கிறார்? இன்னமும் பையன்களுக்கெல்லாம் பிரப்பம் பழம் கொடுத்துக்கிட்டுத்தான் இருக்கிறாரா? அது போகட்டும்; உங்கள் அயல்நாட்டுப் பயணமெல்லாம் எப்படி இருந்தது? அங்கே கண்டது கேட்டது அனுபவிச்சது எல்லாத்தையும் நான் உங்களிடம் அந்த நாளிலே பாடம் ஒப்பிச்சது போல நீங்க எனக்கு இப்போது ஒப்பிக்கணும்!''

''அடேடே! ஸார், 'ஃபாரின்' கூடப் போய் வந்திருக்கிறாரா?'' என்று ஆச்சரியத்துடன் வினவினார் சபாபதி. இது போன்ற கிராமப் புறத்தில் வசிப்போருக்குக் கூட அப்படி ஓர் அதிர்ஷ்டம் அடிக்கக் கூடும் என்று நம்ப இயலாதவர் போல.

''ஆமாங்க; அதுக்கு 'டீச்சர்ஸ் எக்ஸ்சேஞ்சு புரோகிராம்'னு பேரு. உலகின் பல்வேறு நாடுகளிலும் உள்ள உபாத்தியாயர்களைச் சில மாதங்களுக்குப் பரிவர்த்தனை செய்துக்கிடுறாங்க. அநுபவ பூர்வமான உலக ஞானம் ஓரளவுக்கேனும் இருக்கிறவங்கதான் நல்லபடியா போதனை செய்யத் தக்கவர்களாக இருக்க முடியுமென்கிற நோக்கம்; உலக மக்களிடையே ஒற்றுமையும் சகோதர பாவமும் வளர இது ஒரு வழி என்கிற கருத்து; போதனை முறைகள் பற்றிய பல புதிய விஷயங்களையும் தெரிஞ்சுக்கிடலாம் என்கிற காரணம் எல்லாம் இந்தத் திட்டத்துக்கு அடிப்படையாக அமைஞ்சிருக்குது.''

''தேவலாமே!'' 'ஸ்டூடெண்ட்ஸ் எக்ஸ்சேஞ்சு புரோகிராம்' என்று ஒன்று ஏற்படுத்த மாட்டேனென்கிறான்களே; அதுதான் எனக்குக் குறை!'' என்று கூறிய சபாபதி அது கேட்டுச் சிரித்த அவர்களுடன் தாமும் கூடச் சேர்ந்து நகைத்தார்.

''அந்தப் பிரயாணம் பற்றியெல்லாம் அத்தனை சுலபமாகக் கூறிவிட முடியுமா தம்பி?'' என்று கேட்டார் மாருதி. ''மேனாட்டுப் பயணம் மேற்கொண்ட ஒவ்வொருவருமே ஒவ்வொரு புத்தகம் எழுதக் கூடிய அளவுக்கு அல்லவா அனுபவங்களைத் திரட்டிக் கொண்டு வருவாங்க! அதிலும் ஒருத்தர் மனத்தில் ஏற்பட்ட அபிப்பிராயங்கள் மற்றொருத்தருடையதைப் போலில்லாது தனித்து விளங்கி, சுவாரஸ்யமூட்டுமே!''

''தம்பி புத்தகங்களின் உதவி கொண்டே உலகத்தை இதுவரை எட்டு தரம் சுற்றி வந்திருக்கும்னு நினைக்கிறேன்; இதோ பாருங்க!'' என்று தங்கப்பன் திண்ணையில் வைத்து வந்துவிடத் தாம் கையோடு எடுத்து வந்திருந்த புத்தகத்தை உயர்த்திப் பிடித்துக் காண்பித்தார் சபாபதி.

''நிறையப் படிக்க வேண்டியது அவசியம்தான் தங்கப்பா! ஆனால் மேலே மேலே படித்துக் கொண்டு மட்டுமே போவதால் பயனில்லை. அது விடாமல் கவளம் கவளமாக உணவை உள்ளே தள்ளிக் கொண்டே இருப்பதற்கு ஒப்பாகும். சாப்பாடு ஜீரணமாக நேரமளிப்பது போல் படித்த பிறகு அதைப் பற்றிச் சற்று நேரம் சிந்தித்து மூளையில் கிரகித்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் 'அறிவு அஜீரணம்' உண்டாகிவிடும்...!''

''ஆகா! என்ன அருமையான கருத்து!'' என்று பாராட்டினார் சபாபதி. ''தம்பி இத்தனை அழகாகப் பேச எங்கே கத்துக்கிட்டதுன்னு யோசிச்சுக்கிட்டிருந்தேன்; இப்பத்தான் விஷயம் புரியுது!''

''தங்கப்பன் என்ன நீங்கள் பிரமிக்கும்படி அத்தனை சுவாரஸ்யமாகவா பேசுகிறான்?'' என்று கேட்டார் மாருதி, பெருமிதத்தை மறைத்துக் கொள்ள முயன்று தோல்வியுற்றவராக.

''நல்லா கேட்டீங்க! ரயில்லே வரப்போ தெரியாத்தனமா தம்பிகிட்டே வாயைக் கொடுத்து மாட்டிக்கிட்டேன். வீடு வந்து சேருகிற வரை போர் அடிச்சுத் தீர்த்துடுச்சு!''

இதைக் கேட்டுக் கொண்டே வந்த செல்லத்தின் கரங்கள் நடுங்க, அவள் எடுத்து வந்த மோர் கொஞ்சம் கீழே சிந்தியும் விட்டது. ''அப்பா! அவர்கள் நிஜமென்றே எடுத்துக் கொண்டுவிடப் போகிறார்கள்'' என்றாள் பயத்துடன்.

''அடாடா! அத்தானிடம் உள்ள கரிசனத்தைப் பார்த்தீங்களா?'' என்று உறவு முறையை விளக்கினார் சபாபதி. ''இந்த வருஷம்தான் எஸ். எஸ். எல். ஸி. எழுதியிருக்கு; 'ஃபஸ்ட் கிளாஸி'லே பாஸாகணும்னு ஆசீர்வாதம் பண்ணுங்க!''

''சீக்கிரமா கலியாணம் ஆகணும்'' என்றார் மாருதி.

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் கிடைக்கும் பாமாலிவ் டால்க் டின்கள்—
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

FT.G.7 TAM.

# எல்லா வேலையும் என் தலையிலே!



எல்லா வேலையும் நானே செய்ய
வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்...
எனக்கோ ஒரே சோர்வு. குழந்தைகள்,
சமையல், வீட்டுவேலை
எல்லாவற்றையும் எப்படி
நானே சமாளிக்க முடியும்...

என் கணவர் ஒரு நாள்
ஹார்லிக்ஸ் வாங்கி
வந்தார். ஹார்லிக்ஸ்
பருகினால் இழந்த
சக்தியை மீண்டும்
பெறலாம் என்றார்!




இப்பொழுது
என்னைப்
பாருங்கள்!
திட
ஆரோக்கியத்
துடன் தெம்பும்
சுறுசுறுப்புமாய்
இருக்கிறேன்.
எல்லாம் ஹார்லிக்ஸ்
செய்த நன்மை!




போஷாக்குக் குறைவினால்
ஏற்படும் சோர்வும்
தளர்ச்சியும் நீங்க
ஹார்லிக்ஸ் பருகும்படி
டாக்டர்கள் சிபாரிசு
செய்கிறார்கள். ஆடைச்
சத்து மிகுந்த பால்,
கோதுமை மாவு,
மால்ட்டட் பார்லி இவற்றின்
போஷாக்குச் சத்துக்கள்
ஒருங்கே கொண்ட
ஹார்லிக்ஸ் இழந்த
சக்தியை மீண்டும் பெற
உதவுகிறது என்பது
டாக்டர்களுக்குத்
தெரியும்.

**ஹார்லிக்ஸ்**
*அதிக சக்தி*
*அளிக்கிறது!*

சபாபதி இதற்குப் பதிலேதும் கூற முற்படுவதற்கு முன் தங்கப்பன் அவசரமாக முந்திக் கொண்டு பேசினான்: ''இன்னைக்குச் செல்லம்தான் சமையல் செய்கிறான் ஸார்! இருந்து சாப்பிட்டு விட்டுப் போகணும் நீங்க. அக்கரைச் சீமைக்குப் பழக்கப்பட்டு வந்திருக்கீங்களில்லே, அதனால் இன்னைக்கு மேனாட்டுப் பாணியிலே 'ஹாம்பர்கர்' ஸ்பெஷல்!''

அது வரை செல்லத்தின் கரங்களில் மட்டும் குடியேறியிருந்த நடுக்கம் இப்போது அவள் உடல் முழுதும் பரவியது! தட்டித் தடுமாறி எப்படியோ உள்ளே போய்ச் சேர்ந்தாள் அவள்!

## அத்தியாயம் 18

# நெருங்கிய உள்ளங்கள்

கலகலப்பான அவர்களது சம்பாஷணை நீண்டு கொண்டே போயிற்று. கேட்கவும் சொல்லவும் எத்தனையோ சமாசாரங்கள் இருந்தன. எனினும், சாப்பிட உட்காருவதற்குச் சற்று நேரத்துக்கு முன்னால் மாருதி கூறிய ஒரு விஷயம் தங்கப்பனை உற்சாகம் இழக்கச் செய்து விட்டது.

''தம்பி! ஷண்முகம் பற்றிக் கேட்டாயே! அவரைப் பற்றித்தான் சொல்ல வாயெடுத்தேன்; அதற்குள் பேச்சு வேறு திசையில் திரும்பிடுச்சு. அவர் இறந்து நேற்றோடு மூணு மாசமாகுது!''

இதைக் கேட்ட பிறகு தங்கப்பனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. தமது அத்யந்த நண்பரது மறைவு குறித்து மிகவும் விசனித்தவர்தான் மாருதி. எனினும் மாருதிக்கு ஷண்முகம் இல்லாத பள்ளிக்கூடமும் சத்தியபுரியும் இதற்குள் ஓரளவு பழகிப் போய் விட்டிருந்தன. சபாபதிக்கோ முன்பின் தெரியாத ஷண்முகத்தைப் பற்றிய துயர உணர்ச்சி ஏதுமே தலைகாட்டவில்லை. வழக்கமான கிண்டல் பேச்சிலேயே அவர் மீண்டும் இறங்கியபடியே செல்லத்தின் சமையலை 'ஒரு கை' பார்த்துக்கொண்டிருந்தார். ஆனால் தங்கப்பனுக்கோ சாப்பாடே இறங்கவில்லை.

''ஊட்டியிலே யிருந்து வரப்போ கினெண்டேலைத் தாண்டியதும் ஒரே காப்பி தாகம் எனக்கு. அந்த ஞாபகம் வந்துட்டால்தான் அப்புறம் குடிச்சுத் தீருகிறவரைக்கும் பைத்தியம் பிடிச்சாப் போலே ஆகிவிடுமே! தம்பி காப்பி கொண்டு வருகிறதாச் சொல்லி நடுவே ஒரு ஸ்டேஷன்லே இறங்கிப் போனான். நான் ஆவலோடே காத்துக்கிட்டுக் கிடந்தேன். திடுமுன்னு ஜன்னல் வழியா தங்கப்பனோடே ஒரு கை நீண்டது. பூவும் காயும் இலையும் தழையுமா ஒரு செடியோட கிளையை ஒடிச்சுப் பிடிச்சுக்கிட்டு, 'இந்தாங்க மாமா, காப்பி!' என்கிறான்! என்னன்னு கேட்டால் பிளாட்பாரம் ஓரத்திலே மலைச்சாரலிலே காப்பித் தோட்டம் பயிராகி இருக்குதாம், சொல்கிறான்!''

''தேவலாமே!'' என்று சிரித்தார் மாருதி. ''தங்கப்பன் பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதே போக்கிரி என்று பெயரெடுத்தவன்தான்!''

''தவறிப்போய் அவனிடம் 'இப்படி ஒரு டீ எஸ்டேட் நமக்குச் சொந்தமாக இருந்தால் ஹாய்யாக உட்கார்ந்துக்கிட்டிருக்கலாம்' அப்படீன்னு சொல்லித் தொலைச்சுட்டேன். அவ்வளவுதான், பழி தீர்த்துட்டான். அதெப்படி ஹாய்யா இருப்பேன்னு சொல்லலாம்னு சண்டைக்கு வந்து பாயறான்.''

''நியாயம்தானே?'' என்றார் மாருதி. ''டீ எஸ்டேட்டை நிர்வகிக்கிறதுன்னா இலேசுப்பட்ட காரியமா? பச்சைப் புள்ளைங்களைப் பாதுகாக்கிறதைவிடப் பத்திரமா அதை வளர்க்கணும். ரொம்பக் கஷ்டம். எனக்குத் தெரிஞ்சு ஒரு வெள்ளைக்காரத் துரை உசிரை விட்டு உழைச்சு டீ எஸ்டேட்டிலே சம்பாதிச்சார். பல வருஷங்கள் பாடுபட்டு நம்ப நாட்டுக்கு அந்நியச் செலாவணி ஏராளமாகச் சம்பாதித்துக் கொடுத்தார். லட்சம் லட்சமா நம்ப சர்க்காருக்கு வரிகளையும் செலுத்தினார். கடைசிக்காலத்தில் அவருக்குத் தமது தாய்நாட்டுக்குத் திரும்பிச் சொந்த ஊரிலே நிம்மதியா, கிழவியான தமது பெண்டாட்டியோடு பொழுதைப் போக்கணும்னு ஆசை. லாப நஷ்டம், வரவு செலவு, கடன் கொடுக்கல் வாங்கல், சர்க்காருக்குத் தர வேண்டிய வரிகள் எல்லாம் போக மிஞ்சியது, அவருக்கு நாலு லட்சம் ரூபாய். அதைச் சொந்த ஊருக்குக் கொண்டு போக அனுமதி கேட்டார். ரிஸர்வ் பாங்குக்காரங்க என்ன சொன்னாங்க தெரியுமா? 'கொண்டு போங்க, வருஷத்திலே இருபதாயிரம் ரூபாய் வீதம் எடுத்துக்கிட்டுப் போங்க' அப்படீன்னாங்க! 'ஐயா வருஷத்திலே இருபதினாயிரம்னா முழுப் பணத்தைக் கண்ணாலே பார்க்க இருபது வருஷங்களாகுமே எனக்கு. இப்போதே எழுபது வயது

ஆகுதே. அதுவரை நான் உயிரோடே இருக்கணுமே'ன்னு கேட்டுப்பார்த்தார். ஊஹூம்! 'அது பற்றி எங்களுக்கு அக்கறை இல்லை'ன்னுட்டாங்க! இந்த லட்சணத்திலே அயல் நாட்டிலே யிருந்து பலபேர் இங்கே வந்து முதல் போட்டுப் புதுப் புதுத் தொழில்களை நிறைய ஆரம்பிக்கணும்னு நாம் எதிர்பார்க்கிறோம். சங்கதி தெரிஞ்ச எவன் வருவான்?''

சபாபதி அவர் கூறிவந்த விஷயத்தை விட்டார்; அதன் முக்கியத்துவம், அதிலுள்ள கருத்துக்கள் எல்லாவற்றையும் லட்சியம் செய்யாமல் மறந்தார். ''என்ன ஆச்சரியம் போங்க! உங்களைப் போலவேதான் தங்கப்பனும் எப்போ பார்த்தாலும் தேசிய விவகாரங்களிலேயே மனசைச் செலுத்திப் பேசறான்'' என்று குருவுக்கும் சிஷ்யனுக்கும் உள்ள ஒற்றுமையைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தவராகக் கூறினார்.

**சா**ப்பிட்டுத் தாம்பூலம் தரித்து மாருதி விடைபெற்றுக் கொண்டு போன பிறகு தங்கப்பன் ஏணி போன்ற அமைப்பில் மரத்தாலான படிக்கட்டுக்களின் வழியே ஏறி, மொட்டை மாடியில் ஓலைக் கூரையும் தட்டிச் சுவரும் கொண்ட தனது எளிய தனி அறையை அடைந்தான். ஒரு பக்கத்தில் 'ஷெல்பில்' அவனுக்குப் பிடித்தமான புத்தகங்களும் மறுபுறம் துணிமணிகள் வைக்கும் சிறு அலமாரியும் அறையின் மையத்தில் படுக்க வசதியாக ஒன்றோடொன்று ஒட்டினாற்போல் போடப்பட்டிருந்த இரு பெஞ்சுகளும் இருந்தன. நாற்பது 'வாட் பல்பு' ஒன்று 'ஒயரில்' தொங்கி மெல்லக் காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்தது. ஜமக்காளத்தை உதறி விரித்துத் தலையணையையும் தட்டிப் போட்டான் தங்கப்பன். பாதியில் விட்டிருந்த புத்தகத்தைப் படுத்தபடி பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். மனம் அதில் லயிக்கவில்லை. புத்தகம் பிரித்தபடியே அவன் நெஞ்சிலே கவிழ்ந்து சாய்ந்தது. தங்கப்பனின் சிந்தனை படித்த விஷயத்தைப் பற்றியதாயில்லை; செல்லத்தைக் குறித்ததாய் அமைந்தது.

இத்தனை நாட்களாய் இல்லாமல் செல்லத்தை அவன் இன்று பிற்பகல் முதல் ஒரு புதிய கோணத்தில் பார்க்க ஆரம்பித்திருந்தான். அது காரணமாக அவன் தனது இதயத்தைச் சுற்றிலும் போட்டிருந்த லட்சிய வேலியைச் சாமர்த்தியமாகக் கடந்து அவள் உள்ளம் தன்னுடையதுடன் ஒன்றிவிட முயன்று அதில் வெற்றியும் காணும் தறுவாயிலிருப்பது போல் அவனுக்கு ஒரு பிரமையும் அதன் விளைவாகக் கலவரமும் உண்டாகியிருந்தன.

அந்தக் கலவரத்தை அதிகமாக்க வென்றே தான் வந்தது போல் மைதீட்டிய தன் எழிலார்ந்த நயனங்களில் கரும் பட்டில் உருட்டிவிடப்பட்ட நல்முத்துக்களாகக் கண்ணீர் முத்துக்கள் திரண்டெழுந்து நின்று ஒளி சிதற அந்த அறையின் வாசலில் தோன்றினாள் செல்லம். (தொடரும்)

## எப்படி முடியும்?



புது மணமான மோகனன் வாய் திறந்து சிரித்தான். அவன் முத்துப் பற்கள் பளபளத்தன.

உங்கள் புன்னகைதான் என்னை மயக்கியது. உங்கள் பற்கள்தான் எத்தனை வரிசை! — என்று அவன் மனைவி ரேவதி, கூறும்போதெல்லாம் உள்ளுணர்வு உறுத்த 'என் உன் பற்களும்தான் அழகாய் இருக்கின்றன' என்று கூறிச் சமாளிப்பான்.

காரணம்.........?

அவன் பல் செட் வைத்துக் கொண்டிருந்தான்.

கணவன், மனைவியிடையே ஒரு சிறு விஷயத்தில்கூட ஒளிவு மறைவு கூடாதென்பது அவர்கள் திட்டம்! ஆனால் தனது பொய்ப் பல் விஷயத்தை மட்டும் தன் இதயத்திலேயே சமாதி வைத்து விட்டான்!

ரேவதியோ அவன் வரிசைப் பற்களை அத்தனை புகழுகிறாள்! இவை யத்தனையும் பொய்ப் பற்கள் என்று தெரிந்தால் அவள் உள்ளம் உடைந்து விடாதா என்ன?

இதனால் தினம் அவள் அறியாமல், குளிக்கும்போது தன் பல் செட்டைச் சுத்தப்படுத்தி அதை அணிந்து வந்தான்.

ஒரு நாள் காலை ஐந்து மணி இருக்கும். புரண்டு படுத்த மோகனன் பக்கத்துக் கட்டில் காலியாக இருப்பதைக் கண்டு திகைத்தான்!

ரேவதி எங்கே? பக்கத்துக் குளியல் அறையில் ஏதோ சத்தம் கேட்டது. மோகனன் மெல்ல எட்டிப் பார்த்தான்.

குழாயடியில் ரேவதி என்ன செய்து கொண்டிருக்கிறாள்?

(எப்படி முடியும்? - சிந்திக்க. பிறகு 41-ம் பக்கம் பார்க்க.)

புன்னகை



# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

'Aiyars ATC-508 TAM A




## 37. மூண்டதே போர்!

இராமரை மானுடன் என்றான் இராவணன். கிருஷ்ணரை இடையன் என்றான் துரியோதனன். இதேபோல் முருகனைப் பாலன் என்றான் சூரபன்மன்.

உண்மை என்னவெனில் கடவுள் பாலனாக வந்தார்; கடவுள் மானிடனாக வந்தார்; கடவுள் யாதவனாக வந்தார். கடவுளைக் கல் என்கிறார்கள் சிலர்; கடவுள் கல்லுக்குள்ளும் விளங்குகிறார்.

சிங்கமுகாசுரன் எவ்வளவோ சொல்லியும் சூரனால் முருகனைச் சிறு குழந்தையாகத்தான் காண முடிந்தது. தேவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்க முடியாது என்று பிடிவாதமாகக் கூறி விட்டான்.

சிங்கமுகாசுரனுக்குத் தாபம் பொங்கியது. ''நான் நல்லதைச் சொன்னேன். கேட்காமல் என்னையே இகழ்ந்துவிட்டார் தமையனார். பின்னால் என்ன நேரும் என்பதை அவர் அறிந்து கொள்ளவில்லை. எல்லாம் விதியின் செயல். விதியை வெல்ல யாரால் முடியும்? சிவபெருமான் அண்ணனுக்குத் தந்தருளிய காலக் கெடு முடிந்து மறைய வேண்டிய தருணம் நெருங்குகிறது போலும்'' என்று மனத்துக்குள் எண்ணினான். அவனது உள்ளத்தில் சகோதர வாஞ்சை பெருக்கெடுத்தது-




'அண்ணன் தன்னை எவ்வளவு கடிந்து கொண்டாலும் அவனைக் கைவிட லாகாது. அவர் இறப்பதற்கு முன்பே தான் இறப்பது முறை' என்று முடிவு செய்து கொண்டான். சூரபன்மனை நோக்கி, "அண்ணா! நான் தவறு ஏதும் செய்திருந்தால் மன்னித்து விடுங்கள். நான் போருக்குச் செல்கிறேன். போரில் பகைவர்களைக் கொன்று வெற்றியுடன் மீளுவேன். எனக்கு விடை தாருங்கள்" என்று கூறினான்.

பொது தருமமும், குடும்ப தருமமும் ஒன்றோடொன்று உரசுவதுண்டு. இவற்றில் விபீஷணன் ஒரு விதமும் கும்ப கர்ணன் ஒரு விதமும் முடிவெடுத்தனர். சிங்கமுகாசுரன் கும்பகர்ணனைப் போலவே முடிவெடுத்தான்.

தம்பியின் சொற்களைக் கேட்டு சூர பன்மன் அளவிலா ஆனந்தமடைந்தான். "தம்பி! உன் வல்லமை எனக்குத் தெரியும். என் நெஞ்சுறுதியைச் சோதிக்கத்தான் முன்பு ஏதேதோ பேசினாய் போலும்! நீ உன் ஊருக்குச் செல். அங்கு படைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு தயாராக இரு. போருக்கு நான் அழைக்கும்பொழுது வரலாம்" என்று கூறினான். அதன் படியே சிங்கமுகாசுரன் தனது நகர மாகிய ஆசுரத்துக்குச் சென்றுவிட்டான்.

யுத்தம் தொடங்கிவிட்டது. தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் யுத்தம் இது. யுத்தத்தில் தர்மந்தானே வெல்லும்? உலகம் தோன்றிய நாள் தொட்டு அதர்மம் ஒரு நாளும் வென்றதில்லை.

இராமாயண யுத்தம் ஆசைக்கும் நிராசைக்கும் நடந்த யுத்தம். இராவணன் ஆசை பற்றித்தானே போர் செய்தான்? இராமச்சந்திரமூர்த்திக்கு நிராசை. ராஜ்யபாரம் செய்ய வேண்டும் என்ற ஆசை இல்லை; பொன்னாசை இல்லை; பெண்ணாசை இல்லை. நிராசை

உள்ளவர்தான் கடவுள். ஆசையற்றவர்களுக்குத்தான் நிம்மதி இருக்கும்.

அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்
அஃதுண்டேல்
தவா அது மேன்மேல் வரும்

என்பார் திருவள்ளுவர். அவர் அழகாகச் சொல்லிவிட்டார். தன்னைவிடக் கீழான நிலையில் உள்ளவர்களைக் கண்டு ஒருவன் தான் பெற்றுள்ள மேல் நிலைக்காக மகிழ்ச்சி யடைய வேண்டும். அப்போதுதான் மனத்தில் சாந்தி ஏற்படும் என்று குமரகுருபரரும் சொல்லுகின்றார்.

தம்மின் மெலியாரை நோக்கித்
தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க!

இராவணனுக்கு இலட்சம் மனைவிகள். அப்படியிருக்க இன்னொருவன் மனைவியை அபகரித்துச் சென்றான். அதனால் அவனுடைய புதல்வர்கள் அழிந்தார்கள். நாடு அழிந்தது. பிரஜைகள் அழிந்தனர். இறுதியில் அவனும் அழிந்து விட்டான். இராவணன் ஆசையினால் அழிந்தான். ஆசைக்கு அடிமையாகின்றவன் அழிவையே அடைவான். பிறர் பொருளை விரும்பினான் துரியோதனன். அதனால் அவன் அழிந்தான்.

சூரபன்மன் அறநெறியை விட்டு விட்டு அதர்மத்தைக் கடைப்பிடித்தான். அதனால் அழியப் போகிறான்.

★

கதிரவன் உதயகிரியினை அடைந்தான். திருச்செந்தூரில் எழுந்தருளியிருந்த கந்தக் கடவுள் வீரவாகு தேவரை நோக்கி, ''பழிக்கு அஞ்சாது பாவங்களைப் புரியும் சூரபன்மனையும் சூது நிறைந்த அசுரர்களையும் அழித்து தேவர்கள் துயர் நீக்குவதற்காக வீர மகேந்திரபுரி செல்ல வேண்டும். நம் தேரைக் கொண்டுவா'' என்று கட்டளையிட்டார். தங்கள் துயரெல்லாம் நீங்கியது என்று கருதிய தேவர்கள் கந்தப் பெருமானின் கழலினை வணங்கித் துதித்தனர்.

கந்தப் பெருமானின் கட்டளைப்படி வீரவாகு தேவர் மனோவேகத் தேரைக் கொண்டுவந்து எம்பெருமானின் திருமுன்னர் நிறுத்தினார். சிங்காதனத்திலிருந்து இறங்கிய எம்பெருமான், ''நாம் சூரபன்மனை அழிக்க வீரமகேந்திரபுரி செல்கிறோம். நீங்களும் அவரவரது வாகனங்களில் நம்முடன் புறப்பட்டு வாருங்கள்'' என்று தேவர்களுக்கு உத்தரவிட்டார்.

பிரமதேவர் அன்னப் பறவைமீதும், திருமால் கருடன் மீதும், இந்திரனும் மற்றைய தேவர்கள் தத்தம் வாகனங்கள்மீதும் ஏறிக் கந்தவேளைச் சூழ்ந்து கொண்டார்கள். நினைத்த மாத்திரத்திலேயே எல்லாப் புவனங்களையும் அழிக்கும் ஆற்றல் பெற்ற படைத்தலைவர்கள் நூற்றெட்டுப் பேரும் தொடர்ந்தார்கள். அதனை அடுத்து இரண்டாயிரம் பூதப் படைகளும் ஆரவாரத்துடன் புறப்பட்டன. வானவர்கள் பூமழை பொழிந்தார்கள்.

முருகப் பெருமானுடன் சென்ற பூதப் படைகளின் பேரொலி எங்கும் ஒலித்தது. அவர்கள் சென்றபோது ஏற்பட்ட புழுதி சூரிய சந்திரர்களுடைய ஒளியையும் மறைத்து விட்டதாம். கடலில் பூத சேனைகள் இறங்கினார்கள். அவர்களுக்குக் கடலே கணுக்கால் அளவு தான் இருந்தது. கடலில் இருந்த பெரிய பெரிய மீன்களும் திமிங்கிலங்களும் சிறு புழுக்களைப் போன்றிருந்தன. பூதப் படை இறங்கிக் கடலைக் கலக்கியதால் அது சேறாகியது. அந்தச் சேறு உலர்ந்த பின் புழுதியாக எங்கும் பறந்தது.

வீரமகேந்திரபுரி தென்கடலில் உள்ளதொரு தீவு. வடக்கே உள்ள தீவு இலங்கை. அந்த வழியாக எம்பெருமான் சென்றபோது, பிரமன், திருமால் இந்திரன் ஆகிய மூவரும் சுவாமியை வணங்கி, ''மகா பாவியாக உள்ள சூரபன்மன் இருக்கும் மகேந்திரபுரி தங்கள் திருப்பாதம் பதியத் தகுதி பெற்றதல்ல. அந்நகருக்கு அடுத்த எல்லையாகிய இங்கேயே தங்கியிருந்து போர் செய்வதற்குப் பாசறை அமைத்துக் கொள்ளலாம்'' என்று வேண்டிக் கொண்டார்கள். சுவாமி அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். தேவதச்சனை அழைத்து, ''உடனே விரைந்து இங்கு ஒரு பாசறை ஏற்படுத்து'' என்று எம்பெருமான் ஆணையிட்டார். அந்த ஆணையின் வண்ணம் தேவதச்சன் ஒரு பாசறையை அமைத்தான். அதற்கு ஏமகூடம் என்று பெயரிடப்பட்டது.

எம்பெருமானின் தேர் கீழே இறங்கியது. சுவாமி ஏமகூடத்தின் வீதிகளில் பூத சேனைகளை நிறுத்தினார். இலக்கத் தொன்பது வீரர்களோடு திருக்கோயிலினுள் சென்று அரியணையில் அமர்ந்தார். ஏமகூடம்தான் கதிர்காமம். கதிர்காமம் என்றால் ஒளி மயமான விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றித் தருவது என்று பொருள். அங்கே சுவாமி ஒளி மயமாக விளங்குகின்றார். போர்க் கோலத்துடன் இருக்கிறார். எனவே, அவரைத் தரிசிக்கக் கூடாது என்று

திரை போடப்பட்டுள்ளது: அங்கே உள்ள கர்ப்பூர தீப ஒளியைத் தரிசனம் செய்ய வேண்டும். கதிர்காமத்து மண், காமக் குரோத உணர்ச்சிகளை ஏற்படுத்தாது: கதிர்காமத்தைப் பற்றி அருணகிரி நாதர் பாடுகின்றார்.

**மருவுமடி யார்கள் மனதில் விளையாடு**
**மரகத மயூரப் பெருமாள்காண்**
**மணிதரளம் வீசி யணியருவி சூழ**
**மருவுகதிர் காமப் பெருமாள்காண்**

முருகப் பெருமான் கதிர்காமத்தில் வந்து தங்கிவிட்டார். சூரபன்மன், போருக்கு வர வேண்டாமா?

**நா**ரதர் தேவரிஷி. அவர் ககன மார்க்கமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தார். மெத்தப் படித்த அவரைப் போன்ற ஞானியோ தவசியோ இன்னொருவர் கிடையாது. நாரதரின் மகிமைகளை நிறைய எடுத்துச் சொல்கிறார் வியாசர். அவரை ஏனைய மக்கள் கலகக்காரர் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அப்படி நினைக்கச் செய்தவர்கள் நாடகக்காரர்கள். நாடகக்காரர்கள் தங்கள் நாடகங்களில் சுவையுள்ள பாத்திரம் வேண்டுமென்பதற்காக ஒரு நாரதரைப் படைத்து அவரைக் கலகம் புரிய வைக்கின்றனர். இதனாலேயே மக்கள் அவரைக் கலகக்காரர் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். நாரதர் கலகக்காரராயிருந்தால், ''ரிஷிகளில் நான் நாரதரா யிருப்பேன்'' என்று பகவான் கீதையில் சொல்லுவாரா? திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமானுக்கு ஒரு பக்கத்தில் தெய்வ யானையை நிறுத்தியிருக்கிறார்கள். மற்றொரு புறத்தில் சாக்ஷாத் நாரதப் பிரம்மம் இருக்கிறார். நாரதர் கலகக்காரராயிருந்தால் எம் பெருமான் தம் பக்கத்தில் வைத்துக் கொண்டிருப்பாரா?

பரதனைப் பார்த்த குகன், ''அடி, உதை, குத்து, கொல்லு'' என்று கத்தினான். பரதன் மிகவும் நல்லவன். ஆனால் குகனுக்கு அவனைப் பற்றித் தெரியாது. அயோக்கிய சகோதரன் அண்ணனைத் துரத்திக் கொண்டு வருகிறான் என்று எண்ணினான் குகன்.

குகன் பரம யோக்கியன். அவசரக்காரனை இலட்சுமணன் அவனுக்கு விஷ ஊசி ஏற்றிவிட்டான். அதனால்தான் குகன் விஷம் கக்கினான். அதுபோலவே சில நாடகக்காரர்கள் நாரதரைப் பற்றி மக்களுக்கு விஷ ஊசி ஏற்றிவிட்டார்கள்.

''ஐயையோ! கொலே!'' என்று கத்தினான் கிராமத்தான். சப்தம் கேட்டுப் போலீசார் ஓடி வந்தார்கள். உள்ளே போய்ப் பார்த்தார்கள். டாக்டர் 'ஆபரேஷன்' செய்து கொண்டிருந்தார். கிராமத்தான் எதைக் கொலே என்று சொல்கிறானோ அந்த 'ஆபரேஷ'னைச் செய்துகொள்ள ஆயிரக் கணக்கில் பணம் கொடுக்கிறார்கள். ஆகவே, அறுப்பதற்குக் கொலே என்று பெயருண்டு; ஆபரேஷன் என்ற பெயரும் உண்டு. நாரத முனிவர் செய்தது 'ஆபரேஷ'னே யன்றிக் கொலே அல்ல. பிரச்னைகள் விரைவில் முடிய வேண்டுமென்பதற்காகவே அங்குமிங்குமாக ஓடி ஓடிப் புதிய நடவடிக்கைகளைத் தொடங்கி வைப்பார் அவர்!

**சிலமு லாவிய நாரதர் வந்துற்**
**றீதவள் வாழ்புன மாமென முந்தித்**
**தேமொழி பாளித கோமள இன்பக்**
**கிரிதோய்வாய்**

**சேலொடு வாளைவ ரால்கள் கிளம்பித்**
**தாறுகொள் பூகமளாவிய இன்பச்**
**சீரலை வாய்நகர் மேவிய கந்தப்**
**பெருமாளே!**

இது அருணகிரிநாதர் வாக்கு. காவிரிப் பெருக்கு போல் வருகிறது. கந்தவேள் ஏமகூடத்தில் எழுந்தருளி யிருந்ததை உணர்ந்த நாரதர் ஆயிரம் தந்தியையுடைய மகதி வீணையை மீட்டிக் கொண்டு சூரனின் தலைநகரான வீர மகேந்திரபுரிக்குச் சென்றார்.

''நாரதரே! வாரும்!'' என்று வரவேற்றான் சூரபன்மன். ''எங்கே வந்தீர்?'' என்று விசாரித்தான்.

நாரதர் எல்லோருக்கும் நல்லவர்.

"சூரபன்மா! உன்னைப்போல் இன்னொருவர் உண்டா என்று உலகமெல்லாம் வர வர அதிகமாகவே பேசிக்கொள்கிறது" என்றார் நாரதர்.

நாரதரின் பேச்சுக்கு இரண்டு பொருள். 'உன்னால் முடியாத காரியம் என்ன இருக்கிறது?' என்றும், 'நீ எதையும் கூசாமல் செய்வாய்' என்றும் இரண்டு பொருளில் சொன்னார் நாரதர்.

சூரபன்மன் தற்பெருமையுடன் தனக்குள் சிரித்துக் கொண்டான். நாரதர் தமது பேச்சைத் தொடர்ந்தார்.

"மகா யோக்கியர்கள் மாதிரி நடந்து கொள்ளும் தேவர்கள், கைலாயம் சென்று உன்னைப் பற்றி சிவபெருமானிடம் முறையிட்டார்கள். அவர்கள் தான் முறையிட்டுக் கொண்டாலும் இந்தச் சிவபெருமான் அவர்களின் பேச்சைக் கேட்டு நெற்றிக் கண்ணைத் திறக்கலாமா? நெற்றிக் கண்ணைத் திறந்ததனால்தானே ஆறு குழந்தைகள் உதித்துக் கந்தன் என்னும் குமாரன் வந்தான்? ஆனால் ஒன்றை மட்டும் நீ சிந்திக்க வேண்டும். ஆகாய அளவுக்கு அடுக்கி வைக்கப்பட்டுள்ள பஞ்சை எரிக்க ஏராளமான தீவர்த்திகளா வேண்டும்? நீ மகா பலசாலி. எத்தனை எதிர்ப்பையும் எரிக்கக்கூடிய ஒரு தீவர்த்தி நீ. உன்னிடம் எதிர்ப்பு ஒன்றும் நடக்காது. அந்தக் கந்தனின் ஆட்கள் உன் தம்பி தாரகன் ஏமாந்திருந்த சமயம் பார்த்து அவனைக் கொன்றிருப்பார்கள். உன்னிடம் வாலாட்ட முடியுமா? அந்தக் குழந்தை கதிர்காமத்துக்கு வந்துவிட்டதாம். நீ இப்பொழுதே புறப்பட்டுப் போருக்குப் போகவில்லையென்றால் உனக்குத்தான் கெட்ட பெயர்" என்று கூறிய நாரதர், மீண்டும் இரு பொருளில் குறும்புடன் பேசினார்: "நீ போனால் எல்லாம் முடிந்துவிடும். உன்னைப் பற்றியேதான் நான் எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அதனால் தான் இதைச் சொல்ல வந்தேன்" என்று கூறினார்.

நாரதர் கூறியதைக் கேட்ட சூரபன்மனின் கண்கள் அனலைக் கக்கின. "அந்தச் சிறுவன் மகேந்திரபுரியை இந்திரலோகம், பிரம்ம லோகம், விஷ்ணு லோகம் போல் சர்வ சாதாரணமாக எண்ணிக் கொண்டிருக்கிறான் போலும். ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆட்சி செய்பவன் நான். என் ஆணையை மதியாமல் கடலைத் தாண்டி வந்த அந்தச் சிறுவனை இப்பொழுதே ஒழித்துக் கட்டுகிறேன். இதற்கு நானே போகவேண்டிய அவசியமில்லை. என் புதல்வன் பானுகோபனை அனுப்புகிறேன். உமது கண்களாலே அவன் வெற்றியுடன் திரும்புவதைக் காணலாம்" என்று கூறினான்.

"சூரபன்மா! இதுதான் அழிவுக்கு வழி! இனியும் தாமதம் செய்யாமல் அக் குமாரனோடு போர் செய்ய உடனே படைகளை அனுப்பு. வெற்றி கிடைக்க வேண்டும் என்று நான் போய்த் தவம் செய்கிறேன்" என்று கூறிவிட்டு ககன மார்க்கத்தில் புறப்பட்டு விட்டார் நாரதர். யாருடைய அழிவையும் யாருடைய வெற்றியையும் அவர் மனத்தில் கொண்டிருந்தார் என்பதைச் சூரன் புரிந்துகொள்ள முடியுமா?

தனது அருகில் நின்ற ஒற்றர்களை அழைத்துச் சூரபன்மன், "வருணனை விரைவில் கொண்டு வாருங்கள்" என்று உத்தரவிட்டான். அவ்வாறே வருணன் அழைத்து வரப்பட்டான். "வருணனே! அந்தக் குமாரனும் பூத சேனைகளும் கடலைக் கடந்து இங்கு வர ஏன் அனுமதித்தாய்?" என்று கோபத்துடன் கேட்டான் சூரபன்மன்.

"மன்னர் மன்னவா! திருமால், பிரமன், இந்திரன், இலக்கத்தொன்பது வீரர்கள் ஆகியோருடன் சிவகுமாரர் விண் வழியே சென்றார். எனவே அவர்களை நான் தடுக்க முடியவில்லை. பூத சேனைகள்தான் என்மீது நடந்து சென்றனர். அப்போது கடல் அவர்களது கணுக்கால் வரை கூட எட்டவில்லை. ஆகவே அவர்களைத் தடுத்து நிறுத்த முடியாமல் போய்விட்டது. அவர்களை நான் எதிர்த்திருந்தால் முன்பு அகத்தியர் செய்தாற் போல் என்னைக் கையால் அள்ளிக் குடித்தது போல் செய்திருப்பார்கள்" என்று நடுங்கிக் கொண்டே கூறினான் வருணன்.

இதற்குள் முருகக் கடவுள் மகேந்திரபுரியை நெருங்கி விட்டார். இதனைக் கண்ட ஒற்றர்கள் சூரபன்மனிடம் ஓடி வந்தார்கள். "அரசே! திருமால், பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்களுடனும், இலக்கத்தொன்பது வீரர்களுடனும், இரண்டாயிரம் வெள்ளம் பூதசேனைகளுடனும் சிவகுமாரன் மகேந்திரபுரியின் வடதிசையில் வந்து பாடிவீடு அமைத்துத் தங்கியிருக்கிறார்" என்று கூறினார்கள்.

சூரபன்மன் துடிதுடிப்புடன், "ஒற்றர்களே! நீங்கள் போய்ப் பானுகோபனை விரைந்து அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

"உத்தரவு" என்று கூறிப் புறப்பட்ட ஒற்றர்கள், பானுகோபன் அரண்மனையை அடைந்து சூரனின் ஆணையைத் தெரிவித்தார்கள். (தொடரும்)

லோகசஞ்சாரம்

# செஞ்சீனா

'அமெரிக்காவைக் கண்டு யாரும் அஞ்ச வேண்டியதில்லை; அது வெறும் காகிதப்புலிதான்' என்று சீனத் தலைவர்களும்; 'சீனாவின் பழைய மரபில் வந்து காவல் துணையாக நிற்பதாக ஐதீகமாகக் கருதப்படும் கால சர்ப்பத்தை வெறும் பிரசாரக் காகிதக் கால சர்ப்பமாக மாற்றிவிட்ட பெருமை மா-சே-துங்கைத்தான் சேரும்' என்று அமெரிக்கப் பத்திரிகைகளும் மாற்றி மாற்றிக் கூறி வரலாம். அமெரிக்காவுக்கும் செஞ்சீனாவுக்கும் இடையில் ஆறாயிரம் மைல்கள் உள்ளன. ஆனால் நமது எல்லைப்புறத்தில் பதினாலாயிரத்தைந்நூறு சதுர மைல்களை விழுங்கிவிட்டு மேலும் கபளீகரம் செய்யச் சமயம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் செஞ்சீனாவை நாம் பிரசாரச் சுழலில் அகப்பட்டு அலட்சியப்படுத்துவது ஆபத்தாக முடியும். சீனாவின் உண்மையான பலத்தை உணர்ந்து மதிப்பதும் அதன் பலவீனங்களை அறிந்து வைத்துக் கொள்வதும் மிகவும் அவசியம். இந்த நோக்கத்தில்தான் செஞ்சீனாவில் பிரயாணம்







< பட்டு நூல் தயாரிப்பு

படங்கள்: நேஷனல் ஜியோகிராபிக்



செய்து நேரடி அனுபவம் பெற்றுத் திரும்பியுள்ள பலரது கருத்துக்களில் முக்கியமானவற்றைத் தொகுத்து இங்கு ஒரு கட்டுரை வடிவிலே தருகிறோம்.

ஃ ஃ ஃ

நரகாசுரன் வீழ்ந்ததற்காகப் பட்டாசு வெடித்துத் தீபாவளி கொண்டாடுகிறோம் நாம். சென்ற வருஷம் அக்டோபர் மாதத்தில் செஞ்சீனாவும் குருஷேவின் வீழ்ச்சியைக் கொண்டாடியது; ஆனால் ஒரு வித்தியாசம்! பட்டாசுக்குப் பதில் ஓர் அணுகுண்டை வெடித்து மகிழ்ந்தது!

ஸ்டாலினைத் தாக்கி இழிவுபடுத்தியதன் மூலம் குருஷேவ் உலக நோக்கில் கம்யூனிஸத்தின் மதிப்பையே தாழ்த்தி விட்டார் என்பதால் குருஷேவ்மீது செஞ்சீனத் தலைவர்களுக்கு அத்தனை கோபம். ஸ்டாலினின் பெருமையை மட்டுப்படுத்தியது மட்டுமா? குருஷேவ் அமெரிக்க மக்களின் நல்லெண்ணத்தைப் பெற அந்த நாட்டுக்குச் சென்று சுற்றுப் பிரயாணமும் அல்லவா செய்தார்? அணு ஆயுதங்களின் ஒழிப்புக்கு வழிகோல மனப்பூர்வமாக முயற்சி எடுத்துக் கொண்டார்! உலகில்

∧ சீனத் தெருக்காட்சி

∨ பள்ளிக்கூடத்தில் ஒரு வகுப்பு



சமாதானம் நிலவ வேண்டும் என்று கூட ஆசைப்பட்டார்! என்ன அநியாயம்! இன்னும் பார்மோசாவைச் செஞ்சீனா தாக்குவதற்கு ருஷ்யா ஆதரவு காட்டவில்லை. இந்தியா மீது படையெடுத்ததற்கு ஆட்சேபனை தெரிவித்தது! இவையெல்லாவற்றையும் விட மோசமான காரியம் ஒன்றையும் குருஷேவ் செய்தார். சீனாவை வழிக்குக் கொணரக் கருதி அதற்கு அளித்து வந்த பொருளாதார உதவிகளை 1960ல் வாபஸ் பெற்றுக்கொண்டார். ருஷ்யப் பொறி இயல் நிபுணர்களை உடனடியாகத் தாய்நாட்டுக்குத் திரும்பச் சொன்னார். ஆகக்கூடி, குருஷேவ் சீனத் தலைவர்களுக்கு நரகாசுரனை விடப் பயங்கரமான ஒருவராகத் தென்பட்டதில் வியப்பில்லை.

குருஷேவின் வீழ்ச்சிக்குப் பிறகு ருஷ்ய—செஞ்சீன உறவுகள் மீண்டும் சிறிது சிறிதாகச் சீர்ப்பட்டுவர இச்சமயத்தில் பாரதப் பிரதமர் ருஷ்யாவுக்குச் சென்று அங்கு நல்ல வரவேற்பையும் பெற்றது சீனாவுக்கு மீண்டும் கோபமூட்டியிருக்க வேண்டும். அதனை எப்படிக் காண்பித்துக் கொள்வது? ''வெடி, இன்னோர் அணுகுண்டை!'' என்று உத்தரவிட்டனர் சீனத் தலைவர்கள்.

அணுகுண்டுகளை வெடித்துப் பரிசோதிக்கலாம். ஆனால் அவற்றைப் பிற நாடுகள் மீது குறி பார்த்து ஏவி விடுவதற்கான அல்லது சுமந்து சென்று வீசுவதற்கான சாதனங்கள் தற்போது சீனாவிடம் கிடையாது என்கின்றனர் ராணுவ அறிஞர்கள். எனினும் இன்னும் ஒருசில வருஷங்களுக்குள் அவற்றைச் சீனா தயாரித்து விடுவதற்கான சாத்தியக்கூறு இருப்பதாகவும் அவர்கள் நம்புகின்றனர். ஆனால் அந்த நாள் வரும்போது சீனா மற்ற நாடுகள் மீது அணுகுண்டுகளைப் பிரயோகிக்குமா என்பதே கேள்வி. இதற்குச் சீனத் தலைவர்களின் மனப் போக்கை ஆராய வேண்டும்.

ஸ்டாலினின் மறைவுக்குப் பிறகு உலகின் கம்யூனிஸத் தலைமைப் பதவி மாஸ்கோவிலிருந்து பீகிங்குக்கு மாறிவிட்டதாகச் செஞ்சீனத் தலைவர்கள் தீர்மானமாக நம்புகின்றனர் என்கிறார் கனடியப் பத்திரிகையாளர் மார்க் கேன். குருஷேவ் வீழ்ச்சிக்குத் தாங்கள் காட்டிய எதிர்ப்பே காரணம் என்று தங்களைத் தாங்களே தட்டிக் கொடுத்துக் கொள்ளும் செஞ்சீனத் தலைவர்கள், உலக முழுமைக்கும் கம்யூனிஸப் புரட்சி பரவுகிற நாள் நெருங்கி விட்டதாக மனப்பூர்வமாக, ஏன், சத்தியமாகவே நினைக்கிறார்கள். இந்த உறுதியான எண்ணத்தை நிறைவேற்ற அவர்கள் எந்த முறையையும் கையாளத் தயங்க மாட்டார்கள். அணுகுண்டுகளைப் பிற நாடுகள்மீது போட்டால் உடனுக்குடன் சீன நகரங்கள் மீதும் அதே போன்ற குண்டுகள் வீசப்படும் என்கிற அச்சம் ஒன்றே அவர்களை நிதானிக்கச் செய்யும்.

அணு சக்தியை ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தும் நோக்கம் சீனத் தலைவர்களுக்குக் கிடையாது. அபரிமிதமான நிலக்கரியும் ஏராளமான நீர்வளமுமுடைய நாட்டில் மனித உழைப்புக்கும் பஞ்சமில்லாதபோது குறைந்த செலவில் முடியும் இவற்றைக் கொண்டே தொழில் வளப் பெருக்கத்துக்கு அவர்கள் அடிகோலுவார்கள்.

அணுகுண்டுப் பரிசோதனைகள் ஒருபுறம் இருக்க, எந்த ஒரு நாட்டின் உண்மைப் பலத்தையும் அதன் ஆயுதக் குவியலைக் கொண்டு மட்டும் கணித்துவிட முடியாது. செஞ்சீனாவின் உண்மையான பலமும் அதன் பொருளாதார, தொழில், விவசாய வளர்ச்சிகளிலும் மக்களின் மனோபாவத்திலும்தான் இருக்க முடியும். இவற்றைப் பற்றி ஜேம்ஸ் டங்கன் என்னும் கனடிய வர்த்தகப் பிரமுகர் ஆராய்ந்திருக்கிறார்.

1958 — 59ல் செஞ்சீனத் தலைவர்கள் ''மகத்தான முன்னேற்றம்'' (The Great Leap Forward) என்ற அடிப்படையில் மாபெரும் திட்டம் ஒன்று வகுத்தனர். அசுர வேகத்தில் நாட்டின் தரத்தை உயர்த்த வேண்டும் என்ற ஆர்வத்தில் தாரதம்மியமில்லாமல் வேகம் காட்டியிருக்கிறார்கள். டிராக்டர் தொழிற்சாலைகள் எழும்பும் வேகத்தில் பள்ளிக்கூடங்களையும் கட்டினார்கள். டாக்டர்கள் போதுமான அளவில் இருக்கிறார்களா என்று கணக்கிடாமல் ஆஸ்பத்திரிக் கட்டிடங்களைக் கட்டிக் குவித்தார்கள். அவசியம்தானா என்று சிந்திக்காமல் அசுர வேகத்தில் காடு மலைமேடு பள்ளம் எல்லாம் ரயில் பாதை போட்டார்கள். இந்த அவசரம் பலனளிப்பதில் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக ஐந்தாண்டு உழைப்பைப் பின்தள்ளி விட்டது.

போதாக்குறைக்கு 1960ல் ரஷ்யாவுடன் ஏற்பட்ட தத்துவப் போராட்டத்தின் விளைவாக ரஷ்யப் பொறியியல் நிபுணர்களும், தொழில் நுணுக்கத் திறமைசாலிகளும் திடீரென்று தாங்கள் ஈடுபட்டிருந்த மாபெரும் திட்டங்களைக் கைவிட்டு விட்டு நாடு திரும்பி விட்டார்கள். திட்டங்களின் தயாரிப்பு நுணுக்கங்களையும் தங்களுடன் எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். ஆகவே அந்த யந்திர சாதனங்களுக்கு உபரி பாகங்கள் தயாரித்து எப்படி அந்த யந்திரங்களை ஓட்ட வைப்பது என்ற கவலை சீன அரசாங்கத்துக்கு. பெரிய யந்திர சாலைகளெல்லாம் இப்போது உபரி பாகங்கள் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கின்றன. இரண்டு ரயில் பெட்டி தயாரிக்கும் தொழிற்சாலைகள் இதன் காரணமாக ரப்பர் டயர்கள் போட்ட தள்ளுவண்டிகள் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கின்றன.

யாங்ஸி - யொங் நதியில் நான்கிங் நகரை ஒட்டி ஒரு மகோன்னத பாலத்தை நிறுவ ரஷ்யர்கள் வந்து சேர்ந்தார்கள். பன்னிரண்டு ராட்சத கான்கிரீட் தூண்களும் எழுந்தன. ஆனால் 1960 ஜுலை மாதத்தில் ஒரு நாள் அந்தத் திட்டம் சம்பந்தமாக வந்திருந்த ஐம்பத்தி ஐயாயிரம் ரஷ்யர்களும் திடீரென்று கிளம்பிப் போய்விட்டார்கள்! அந்தப் பாலம் இன்னும் பன்னிரண்டு தூண்களுடனேயே நிற்கிறது! எல்லாவற்றையும் விட மிகப் பெரிய ஏமாற்றம் விவசாயத் துறையில் ஏற்பட்டது. நாலே மாதங்களுக்குள் 120 மில்லியன் விவசாயக் குடும்பங்கள்

போகிப் பண்டிகையின்போது, நாம் பழைய குப்பை கூளங்களைக் கொளுத்துவதுபோல் தங்கள் சொத்துரிமைப் பத்திரங்களைக் குவித்து வைத்துத் தீக்கிரையாக்கிவிட்டுச் சர்க்கார் இயந்திரத்தின் அடிமைகளாக 26,000 கம்யூன்களில் பணியாற்றுமாறு செய்யப்பட்டனர். இது எதிர்பார்த்த நல்ல பயனை அளிப்பதற்குப் பதில் மகத்தான தோல்வியே கண்டது. வேலையில் ஊக்கமும் உற்சாகமும் இழந்தார்கள் விவசாயிகள்.

இப்படியாகத் திட்டம் ஒரேயடியாகப் பிசுபிசுத்துப் போய், பயங்கரமான பொருளாதார நெருக்கடியும் கடுமையான உணவுப் பஞ்சமும் தோன்றின. ஆனால் தலைவர்களோ மக்களோ மனம் தளரவில்லை. அதைவிட முக்கியம் தவறுகளைத் திருத்திக்கொள்ளவும் தயங்கவில்லை. அப்படித் திருத்திக்கொள்ள முற்பட்டபோது தலைவர்கள் இத்தனை நாட்களாகப் பிரமாதப்படுத்திப் பெரிதாக மதித்துப் போற்றி வந்த கம்யூனிஸ சித்தாந்தங்கள் கொள்கைகள் பலவற்றை விட்டுக் கொடுக்க நேர்ந்தது. இது மிகுந்த மனக் கசப்பை அவர்களுக்கு அளிக்கத்தான் செய்தது. இருப்பினும் கசப்பு மாத்திரையை விழுங்கியேனும் அவர்கள் நாட்டைப் பீடித்த நோயினை நீக்கவே எண்ணினார்கள்.

உதாரணத்துக்குச் சிலவற்றைப் பார்ப்போம்: மாற்றுத் திட்டத்தின் கீழ் தொழில் வளப் பெருக்கம் பின்னுக்குத் தள்ளப்பட்டது. விவசாயத் துறைக்கே முதலிடம் தரப்பட்டது. எங்கு பார்த்தாலும் மூலைக்கு மூலை எழும்பி வந்த கட்டிட வேலைகளுக்கு முடிவு காணப்பட்டது. பிரமிக்க வைக்கும் மாபெரும் கட்டிடங்களால் நாட்டின் பொருளாதார வளம் பெருகாது. அவை வீணே முடங்கிக் கிடக்கும் மூலதனம்தான் என்பதை உணர்ந்தார்கள். தொழிற்சாலைகளில் பணியாற்றவென்று கிராமப் புறங்களிலிருந்து தருவிக்கப்பட்ட எண்ணற்ற தொழிலாளர்கள் மீண்டும் வயல்களில் வேலை செய்வதற்கென்றே திருப்பி அனுப்பப்பட்டார்கள். நாட்டிலுள்ள எல்லா இளைஞர்களுமே பட்டதாரிகளாக விளங்க வேண்டுமென்பதில்லை; முக்கியமான பொறுப்பேற்று மக்களை நடாத்திச் செல்லக் குறைந்த பட்சத் தேவையான பட்டதாரிகளே வேண்டும், அவர்களின் அறிவாற்றலும் திறனும் சிறந்து விளங்க வேண்டும் என்று கண்டார்கள். கல்லூரிகளில் மாணவர்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறைக்கப் பட்டது. அங்கு கல்வியின் தரம் வெகுவாக உயர்த்தப்பட்டது. கம்யூன்கள் எனப்படும் கட்டாயக் கூட்டுப் பண்ணைகளின் விஸ்தீரணம் குறைக்கப்பட்டது. தனி உடைமைகளாக விவசாயிகளுக்குக் கணிசமான அளவு நிலங்கள் திருப்பித் தரப்பட்டன. இங்கு விவசாயி சுதந்திரமாகப் பயிர் செய்யவும் அனுமதிக்கப்பட்டார். கம்யூன்களிலும் அதிகாரவர்க்கத்தின் கொடுமை குறைக்கப்பட்டு விவசாயியின் நியாயமான விருப்பங்களுக்கு மதிப்புத் தரப்பட்டது.

தொழில் துறையிலும் கூடப் பாதுகாப்பு உபகரணங்கள், ரசாயன உரம், வர்த்தகத் துறைக்கான போக்குவரத்து வாகனங்கள், விவசாயக் கருவிகள், கரங்களுக்குத் தேவையான கருவிகள், மின் உற்பத்திக்கான சாதனங்கள், செயற்கை நூல் ஆடைகள் போன்ற முக்கியமான விஷயங்களுக்கு முதலிடம் தரப்பட்டன. அத்தியாவசியமற்றவை பின்னுக்குத் தள்ளப்பட்டன. உதாரணமாக 'மோட்டார் கார்களும் தங்களுக்குத் தயாரிக்கத் தெரியும்' என்பது போல் மாதிரிக்கு ஒன்றிரண்டு செய்யப்படுகின்றன. அவ்வளவே! இன்றும் சீனாவில் உணவும் உடையும் ரேஷன் செய்யப்பட்டாலும் நிலைமை முன்னெப்போதையும் காட்டிலும் திருப்திகரமாக இருப்பதுடன் நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வருகிறது.

படுதோல்வி கண்டு காரிருள் சூழ்ந்ததெனத் தோன்றிய ஒரு நிலையிலிருந்து மீண்டு, வெற்றி பெறலாம் என்ற நம்பிக்கை ஒளிக்கீற்றுக்கள் தென்படும் பாதையில் செஞ்சீனா சென்று கொண்டிருப்பதற்குத் தலைவர்கள் தங்கள் திட்டங்களில் பெரிய மாறுதல்களைச் செய்ய முன்வந்தது மட்டும் காரணமல்ல; மக்களின் ஒத்துழைப்பு இன்றித் தலைவர்களால் எதைச் சாதித்திருக்க முடியும்?

— அடுத்த இதழில் முடியும் —

'மிகத்தான முன்னேற்ற' நாட்களில் (1958-59) மா-சே-துங்கின் சித்தாந்தத்தையும் சீன மக்களின் நிலையையும் மா-சே-துங்கே அடிக்கடி கூறிவந்த இந்தக் கதை அழகாக எடுத்துக் காட்டுகிறது.

"ஒரு குடியானவன் தன் குடிசையின் நுழைவாயிலை ஒரு மாபெரும் மலை மறைத்துக் கொண்டு நிற்பதைக் கண்டான். உடனே அவன் கடப்பாறையும் மண்வெட்டியும் கொண்டு அந்த மலையை வெட்டி அப்புறப்படுத்த ஆரம்பித்தான். அவன் சிநேகிதர்கள் அவனை இந்த அசட்டுத் தனத்தை விட்டு விடுமாறு சொன்னார்கள். ஆனால் அவன் பிடிவாதம் செய்தான். 'இந்தக் காரியத்தை நான் இப்போது செய்யவில்லையானால் எனக்குப் பின்னால் என் பிள்ளைகள் செய்வார்கள் அல்லது என் பேரப் பிள்ளைகள் செய்வார்கள். அதனால் நானே செய்து விடுகிறேன்' என்றான். அவன் கூறியது சரிதானே ? நீண்டகாலத்துக்குப் பிறகு, கடுமையான உழைப்பின் விளைவாக மலை மறைந்தது !"

உழைப்பின் உயர்வை உணர்த்துவதற்காக அன்று ஒவ்வொரு செஞ்சீனப் பள்ளியிலும் தொழிலகத்திலும் கம்யூனிலும் கற்றுத் தரப்பட்ட இந்தக் கதையைக் கேட்டவர்களில் யாரும், "அந்தக் குடியானவன் மலையைப் பெயர்க்க முனைவதற்குப் பதில், ஏன் வேறு ஓர் இடத்தில் தனக்குப் புதிதாக ஒரு குடிசையைக் கட்டிக் கொண்டிருக்கக் கூடாது?" என்ற சந்தேகத்தை எழுப்பத் துணியவில்லை !



— பி. ஜி. கிருஷ்ணய்யா

## புனைபெயர் !

மயன்

புனைபெயர் சகாப்தத்துக்கு ஆதிபிதாவாகச் சிவபெருமானைக் கொள்ளலாம். நெற்றிக் கண்ணன், நீலகண்டன், பொன்னார் மேனியன், பிறைசூடி எனப் பலப்பல புனைபெயர்கள் இருந்தும்கூடத் 'திரிபுரம் எரித்தவ'னுக்குத் திருப்தியில்லை. 'பித்தா' என்றழைத்துப் பாடுமாறு சுந்தரமூர்த்தி நாயனாரைப் பணித்தாராம் !

புனைபெயர் பூண்டு நமக்கு வேண்டாதவர்களின்மீது மொட்டை மனு எழுதலாம்; அநாமதேயப் பத்திரிகைகளுக்கு அவதூறுக் கடிதங்கள் வரையலாம்.

தியாகிகளுக்கும் புனைபெயர் அபயம் அளித்திருக்கிறது. தியாகப் புதல்வர் வ.வே.சு. ஐயர், இங்கிலாந்து நாட்டிலிருந்து மாறுவேஷம் பூண்டு கப்பலில் தப்பித்து ஓடும்போது, ஓர் ஒற்றரின் கண்ணில் பட்டு விட்டார். 'வி.வி.எஸ்.' என்று ஐயர் பெட்டியின்மீது பொறித்திருந்த எழுத்துக்களைக் கண்டுவிட்ட அந்த ஒற்றர், அவர் ஐயர்தானா என்று அறியத் தந்திரமொன்று செய்தார். 'வி.வி.எஸ். ஐயர்' என்ற பெயருக்கு ஒரு தந்திக் கவரை நீட்டினார். ஐயர் அதை அலட்சியமாக வாங்கிப் பார்த்து விட்டு 'என் பெயர் வி. விக்ரம சிங்' என்று கூறிக் கவரை சி.ஐ.டி.யிடமே திருப்பிக் கொடுத்துவிட்டாராம்! சமயோசிதமாக ஐயர் புனைபெயர் ஒன்றைச் சூட்டிக் கொள்ளாமலிருந்தால், ஆங்கிலேயர் கையில் சிக்குண்டு படாதபாடு பட்டிருப்பார்.

'பூ'வொன்றின் பெயரைச் சொன்னால், பலன்களைச் சொல்லும் சோதிடர்கள்போல், புனைபெயரைக் கொண்டு ஒருவருடைய தொழிலைச் சுலபமாகக் கூறிவிட முடியும்.

'கோமாளி' — ஹாஸ்ய எழுத்தாளர்.

கோடைமிடி கோபால்சாமி — இவர் ஓர் அனல் கக்கும் பேச்சாளி.

சங்கமித்திரன் — சரித்திரக் கதையாளர்.

விக்கி — பின்னணிப் பாடகி.

பஜ்ஜி பட்டுசாமி — கூறித்தான் தெரிய வேண்டுமா? இவர் ஒரு ஹாஸ்ய நடிகர்.

கலைமதி — பூர்வாசிரமத்தில் கருப்பாயி என்ற பெயரில் கருப்பட்டி கிராமத்தில் 'ஆப்பக்காரி'யாகத் திகழ்ந்தவள். கலை உலகில் அடியெடுத்து வைத்தவுடன், கலைமதி என்ற பெயர் பூண்டு, 'கால்ஷீட்' கொடுக்க நேரமின்றித் தவிக்கும் முன்னணி நடிகை.

குக்குடானந்தா — பூர்வாசிரமத்தில் சுவாமிகளின் நாமதேயம் 'மைனர்' மருதப்பர்.

'சம்பவங்களை' அப்பட்டமாகச் சித்திரித்து உண்மைப் பெயரில் எழுதினால் என்னாகும்? நடிக, நடிகைகளுக்கும், நாட்டைக் காக்கும் மந்திரிகளுக்கும் தேவைப்படும் போலீஸ் பாதுகாப்பு, 'பேனா' பிடிப்பவர்களுக்கும் வேண்டியதாகிவிடும் !



புனைபெயரின் உதவியால் இதோ, நானே மயன் என்ற பெயருக்குள்தானே ஒளிந்து கொண்டிருக்கிறேன்!



## இன்றைய நாகரிக'

பனாரஸ் புடவை என்றதுமே எந்த மங்கையின் முகம்தான் மலராது? பில் பணம் தர வேண்டிய நிலையில் உள்ள எந்தக் கணவனின் இருதயம் தான் 'பக்பக்' கென்று திகிலுடன் அடித்துக் கொள்ளாது?

படத்தில் ஸ்ரீமதி காஞ்சனமாலா அணிந்திருக்கும் புடவையின் உடல் இலேசான மயில் நீல வண்ணத்தில் பட்டு நூலும் சரிகையும் இழையோட அமைந்தது. நீளமான இலைகளுடன் கூடிய கொடிகளின் வடிவத்தில் தங்க முலாம் பூசிய கெட்டி வெள்ளி ஜரிகையினால் வேலைப்பாடுகள் செய்யப்பட்டது. தலைப்பில் டிசைன்கள் இன்னும் அகலமாகவும் பெரிதாகவும் அமைந்துள்ளன. புடவை என்ன கனம் கனத்தால்தானென்ன? விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களைச் சுமப்பதென்பது பெண்களுக்குச் சிரமமாகவா தோன்றும்?

வேலூர் லாங்பஜார் கே. என். தாமோதரம் அண்டு சன்ஸ், பனாரஸ் ஹவுஸில்—பணமும் ரசிகனின் மனமும் இருந்தால் யாரும் வாங்கக் கூடிய இந்தப் புடவையின் விலை — மூர்ச்சித்து விழ வேண்டாம் — ரூ 900.

படம் : ஸ்டில்லோகிராப் ஸ்டுடியோ



# பெக்கெட்

படம் பார்க்கப்போகிறோம். தியேட்டரில் விளக்குகள் அணைக்கப்படுகின்றன. உடனே நாம் உட்கார்ந்திருக்கும் ஆசனம் காலக் கப்பலாக மாற நாம் எண்ணூறு வருடங்களுக்கு முன்னால் கொண்டு போகப்படுகிறோம். இடம், இங்கிலாந்து. கான்டர்பரி மாதாகோயிலின் பிரும்மாண்டமான மணி அசைந்தாடி ஆர்ப்பரிக்கிறது. அதன் அருகிருந்து நாம் பார்க்கிறோம் கீழே. குடிமக்கள் குழுமிய ஆலய வாசலின் முற்றத்தில் படைவீரர் வழி செய்து அணிவகுத்து நிற்க இரண்டாம் ஹென்றி மன்னர் வந்து இறங்குகிறார். பரந்து விரிந்து கம்பீரமாக வானளாவி நின்ற அந்த மாதா கோயிலினுள் மன்னர் தன்னந் தனியே நடந்து செல்கிறார். எங்கே? தமது இன்னுயிர் நண்பனின் கல்லறையை நோக்கி. அவனது படுகொலைக்குக் காரணமாக, தான் ஆகிவிட்டதை எண்ணி மனம் வருந்தி அதற்குத் தனக்குத்தானே கசையடி கொடுத்து வருத்திக்கொள்ள.

ஆங்கில சரித்திரத்தில் கான்டர்பரி ஆர்ச் பிஷப் தாமஸ் பெக்கெட்டின் படுகொலை உள்ளத்தைத் தொடக்கூடியதொரு வரலாற்று நிகழ்ச்சி. ஷேக்ஸ்பியரின் நாடகமான ஜூலியஸ் சீஸர், சீஸரின் கொலை எப்படியோ அதேபோன்றது பெக்கெட்டின் கொலை. ஆற்றங்கரை மரத்தைப் போன்றது அரசிய வீற்றிருந்த வாழ்வு என்பதை எடுத்துக் காட்டுவது பெக்கெட்டின் வாழ்க்கை.

ஜனரஞ்சகமற்ற இந்தக் கதையை அலுப்புத் தட்டாத வகையில் ஆக்கித் தந்திருக்கிறார்கள் பாரமவுண்ட் பிக்சர்ஸார். மன்னரும் பெக்கெட்டும் இளமையில் எந்தவிதமான நெருக்கத்தில் வாழ்ந்தார்கள் என்பதும், பின்னால் சட்டம், நீதி, நேர்மை, கடமை இவற்றுக்காக மன்னரின் நட்பையும் முறித்துக்கொண்டு 'ஆர்ச் பிஷப்' என்ற தகுதியிலிருந்து நழுவாத் தன்மைக்காகப் பெக்கெட் தம் உயிரையே கொடுக்கும் நிகழ்ச்சியும் மெய் சிலிர்க்க வைக்கின்றன. அப்படி வைக்கிறவர் ரிச்சர்டு பர்ட்டன். கிளியோபாட்ராவில் ஆந்தனியாக வந்த அதே பர்ட்டன்தான் பெக்கெட்டாக வந்து பாவங்களைப் பார்வையால், உணர்ச்சியின் உதடுகளின் துடிப்பால் விழிகளின் அசைவால் உணர்த்தி நம் இதயத்தில் இடம் பெற்றுவிடுகிறார். குணசித்திரப் பாத்திரப் படைப்பான இரண்டாம் ஹென்றி மன்னரின் பாகத்தை ஏற்றுள்ள பீட்டர் ஓடோலும் தாம் பர்ட்டனுக்குச் சளைத்தவரல்ல என்பதை நிரூபிக்கிறார். கடவுளையும் மத சம்பந்தமான காட்சிகளையும் படமாக்கும்போது அதைக் கேலிக் கூத்தாக்கி விடுகிறார்கள் நம் படாதிபதிகள். காரணம் அவர்களுக்கே அவைகளில் நம்பிக்கை இல்லாததுதான். பெக்கெட் ஆர்ச் பிஷப்பாகப் பதவி ஏற்பது, ஆசி வழங்குவது, மாதாகோயில் சடங்குகள் போன்ற காட்சிகளைக் கலை நுணுக்கத்துடன், வேற்று மதத்தவர்களின் மனத்திலும் பயபக்தியை உண்டாக்குமளவுக்கும் படமாக்கி இருக்கும் நல்ல முறையை நம் படாதிபதிகள் அவசியம் பார்க்க வேண்டும். மெய்சிலிர்க்க வைக்கும் காட்சிகள் பல கொண்ட இந்தப் படம்; சரித்திரத்திலுள்ள எந்தவொரு சிறு நிகழ்ச்சியையும் சிறந்த படப்பிடிப்பாலும், காட்சி அமைப்பாலும், நடிப்பாலும் உயிருள்ள சித்திரமாக்கிக் காட்டலாம் என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது.







★

1. டாக்டர் ராதாகிருஷ்ணன் சென்னை விஜயத்தின்போது ராஜாஜி அவர்களின் இல்லத்துக்குச் சென்று அவருடன் அளவளாவி மகிழ்ந்தார்.

★

2, 3, 4. மகான்கள் ராமகிருஷ்ணர், விவேகானந்தர் சரிதத்தை விளக்கும் 'அறிவுக் கனலே அருட்புனலே' நூலை ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் ஜூலை 3ந் தேதி ராஜாஜி ஹாலில் வெளியிட்டார். கல்கி துணை ஆசிரியர் திரு ரா. கணபதி கல்கியில் எழுதி வந்த இந் நூலைக் கலைமகள் காரியாலயத்தார் அழகிய புத்தக உருவில் கொணர்ந்திருக்கிறார்கள். இந்நூலின் சிறப்பினைப் பற்றிச் சென்னை சட்டசபை சபாநாயகர் திரு செல்லபாண்டியன் அவர்களும், கலைமகள் ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களும் பாராட்டிப் பேசினர். கலைமகள் பதிப்பாளர் திரு என். ராமரத்தினம் அவர்கள் ஜனாதிபதிக்கு மாலை யணிவித்துக் கௌரவிப்பதையும் நூலாசிரியரின் கரம் பற்றி ராஷ்டிரபதி பாராட்டுவதையும் படங்களில் காணலாம். ●







## அத்தியாயம் 29

# மனத்தில் ஒரு முள்




“அடியே வேதம்மா! அந்தப் பொட்டுப் புண்ணாக்கை எடுத்துக்கிட்டு வாமடன்னு எத்தினி தடா கூவுறது? அங்கே இன்னாடி பொண்ணே பண்ணிக்கிட்டு இருக்கிறே?”

புகை படிந்த ஓவியம் போல் உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த வேதாவின் முகத்தையே இமைக்காமல் பார்த்துக் கொண்டு, தான் வந்த காரியத்தையும் மறந்து நின்ற சபேசன் புறக்கடைப் பக்கமிருந்து கன்னியம்மாளின் இந்த இடியோசை போன்ற குரல் எழுந்ததைக் கேட்டுத் திடுக்குற்றவனாகப் பின்னால் நகர்ந்தான்.

அதே பதற்றத்துடன் வேதாவும் துள்ளியெழுந்து, “இதோ வந்துட்டேம்மா!” என்றவாறு பிண்ணாக்குக் கூடையைத் தூக்கிக் கொண்டு புறக்கடை வாசல் வழியே மாட்டுக் கொட்டகைக்கு விரைந்தாள்.

‘அடடா, நல்ல சந்தர்ப்பத்தை விட்டு விட்டோமே! தனியாக இருந்த இவளைக் கூப்பிட்டு நச்சியைப் பற்றிய விஷயத்தைத் தெரிவித்து அதைத் தன் தாயிடம் சொல்லச் சொல்லியிருக்கலாமே!’— இவ்வாறு எண்ணிய சபேசன் கையைப் பிசைந்து கொண்டு இருட்டில் அங்குமிங்குமாக விழித்து நோக்கினான். ‘கன்னியம்மாளையே நேரில் பார்த்துச் சொல்லி விடலாமா? அப்படிச் சொல்வதற்குள் என்னைக் கண்டு அவள்,

தன் வீட்டில் நான் மறுபடியும் அனுமதியின்றி இரவு நேரத்தில் படுக்க நுழைந்து விட்டதாகக் கூப்பாடு போட ஆரம்பித்து விட்டால் என்ன செய்வது? மேலும் நச்சி அவளை அடித்து விட்டுப்போன நாளிலிருந்து இன்று வரையில் இந்த வீட்டுப் பக்கமே தலைகாட்டாமல் இருப்பதால் அவளுடைய கோபம் ஆறாமலே இருக்கலாம். அத்துடன் வாரத்துக்கு ஓரிரு முறையாவது தன் மகனிடமிருந்து இரண்டோ மூன்றோ பணம் பெற்றுக் கொண்டிருந்தவள் இப்போது அதுவும் கிடைக்காததால் பசியும் பட்டினியுமாகக் கிடக்க நேரிட்டு, அதனால் அவன்மீது இன்னும் எரிச்சல் கொண்டிருப்பாள். இந்நிலையில் அவளிடம் அவனைப்பற்றி வந்து சொல்ல நீ யாரடா என்றோ, உன்னால்தான் என் பிள்ளை கெட்டுக் குட்டிச் சுவராகி விட்டான் என்றோ என்மீதே அவள் குற்றம் சுமத்திச் சீறிப் பாய்ந்து விடுவாளே!'



கன்னியம்மாள் ஏதோ இரைந்து பேசித் திட்டும் சத்தம் கேட்டது. அதனைச் செவிமடுத்த சபேசனுக்கு உள்ளூற உதறலெடுத்து விட்டது. அங்கிருந்து, சரேலென வேலிக்கு அப்பால் ஓடித் தெருவோரம் நின்று கொண்டான். 'யார் எக்கேடு கெட்டுப் போனால் நமக்கென்ன? வந்த வழியே பேசாமல் திரும்பிப் போய் விடுவோம்.'

தன்னையே வெறுத்துக் கொள்பவன்போல் 'சே' என்று கையை உதறிக் கொண்டான் சபேசன். 'என் விஷயத்தில் நச்சி இப்படி எண்ணி நடந்து கொண்டிருந்தால் இப்போது நான் எந்நிலையில் இருந்திருப்பேன்? மனிதரிடமுள்ள கீழான குணங்களில்இந்த 'நமக்கென்ன' என்பதுதான் மிக மிக மோசமானது. ஏனென்றால் இது அவனுக்கு மட்டுமல்ல, அவனது தேசத்துக்கே பல அழிவுகளைத் தேடித் தரவல்லது.'

தன்னை மீறிய ஒருதுணிவுடன் மீண்டும் உள்ளே செல்லக் காலடி வைத்த சபேசன், ''யாரு நைனா நீ?'' என்ற குரல் கேட்டுத் திகிலுடன் பின்னால் திரும்பினான். பக்கத்து வீட்டுக் குயக் கிழவன் இருமியவாறு அப்போது தான் எழுந்து நின்றான்.

''ஓர் அவசர விஷயம் தாத்தா!'' என்று அவனருகில் ஜாக்கிரதையாக




... கோலினூஸ்

புதியது-தூயது...

அந்த ஐந்தாவது சிறுவனுக்கு ஒரு அருமையான யோசனை: கோலினூஸ் உபயோகித்து மற்றவர்களைப்போல் புன்னகை புரியவும்: கோலினூஸ் டென்டல் கிரீம் மூலம் உன்னுடைய பற்களை நாள்தோறும் காலையிலும் இரவிலும் துலக்கவும். மற்றவர்கள் மத்தியில் நம்பிக்கையோடும் மகிழ்ச்சியோடும் உலவ உதவுவது கோலினூஸ்.



களிப்பில் மலரும் புன்னகை...அது கோலினூஸ் தரும் புன்னகை

நடந்து சென்ற சபேசன், ''இந்த வீட்டு அம்மாளின் மகன் நச்சி உடம்பு ரொம்பவும் முடியாமல் கோட்டை ஸ்டேஷன் ரயில் பாலத்துக்கு அடியிலே படுத்துக் கிடக்கிறான். கொஞ்சம் தயவுசெய்து உள்ளே போய்ச் சொல்லி விடுகிறீர்களா?'' என்றான் படபடந்த குரலில்.

''அந்தத் தறிதலைப் பையனுக்கா? இன்னாவாம் சீக்கு?'' என்று அசுவாரசியமாகக் கேட்டுக்கொண்டே இருட்டில் தட்டுத் தடுமாறிச் சென்ற கிழவன், ''ஏ, கன்னியம்மா!'' என்று குரல் கொடுத்தான். பதிலுக்கு, ''ஊவ்...'' என்ற நீளமான ஓசை கேட்டது.

இனிமேலும் அங்கே நிற்க அஞ்சிய சபேசன், போய்விடலாமா என எண்ணினான். பிறகு, தான் சொல்லியனுப்பிய சேதி என்ன விளைவை ஏற்படுத்துகிறது என்பதை அறிய வேண்டுமென்ற ஆவல் எழவே, தெருவின் மறுபக்கம் போய் ஒரு மரத்தடியில் நின்றுகொண்டான்.

கிழவன் சென்ற சற்றைக்கெல்லாம் திடீரென்று, ''ஐயோ, மவனே!'' என்று அலறிக் கூவிய சத்தம் கேட்டது. ''ரெண்டு மூணு நாட்களாவே என் மனசு சரியில்லே, கொய்ந்தனாரே! என்னென்னமோ பாத்தானிக் கனவெல்லாம் கண்டுக்கிட்டு இருந்தேன்! அப்பவே எனக்கு டவுட்டுத்தான்! ஐயோ, மாரியாத்தா! என் புள்ளையைக் காப்பாத்துடி தாயே!'' என்று அந்த ஊரே இரண்டுபடும்படி மார்பிலும் வாயிலுமாக அடித்துக் கூவி அழுதுகொண்டு தெருவுக்குப் பாய்ந்து வந்து தலைவிரி கோலமாக ஓடினாள் கன்னியம்மாள். அக்கம் பக்கத்துக் குடிசைகளிலிருந்து வெளிப்பட்ட சில பெண்களும் அவளைப் பின்தொடர்ந்து ஓடினர். எங்கெங்கோ படுத்துக் கிடந்த தெரு நாய்களெல்லாம் உலுப்பிக்கொண்டு எழுந்து ஒரு பெரிய பட்டாளமாகத் திரண்டு நின்று ஏக ஊளையிட்டுக் குரைக்க ஆரம்பித்தன.

இந்தக் காட்சியைக் கண்டு அப்படியே பிரமித்து விட்டான் சபேசன். ஒரு தாயின் பாசம் இத்தனை ஆவேச வெள்ளமாய்ப் பீறிட்டுப் பாயும் என்று அவன் இதற்கு முன் கற்பனை செய்துகூடப் பார்த்ததில்லை. ஆயினும் அவனுக்குச் சில விஷயங்கள் இப்போது நினைவுக்கு வந்தன.

இம்மாதிரிக் குடிசைப் பகுதிகளில், ஓய்வு ஒழிச்சல் இல்லாத குழாயடிச் சண்டைகள்; நேரம் வேளை இல்லாமல் கணவன் — மனைவியிடையே அடிதடிப் போர் முழக்கங்கள், அழுகை ஓலங்கள்; கல்யாணம், பண்டிகை, திருவிழாக்களானால் கட்டுக்கடங்காத மகிழ்ச்சிக் கொம்மாளம், கூத்தடிப்பு; அவற்றிலும் திடீர் திடீரென்று கைகலப்பு, கத்தி கபடாப் பிரயோகம்; அற்பமான அபிப்பிராய பேதங்களுக்கெல்லாம் அடுத்தவன் வீட்டுக்குத் தீவைத்தல், வரிமடக்கி அடித்தல், தூக்குப் போட்டுக்கொள்ளுதல்; ஒளிவு மறைவற்ற சரஸ சல்லாபங்கள்; வரைமுறை மீறிய ஆண் பெண் உறவு; அதனால் ஏற்படும் பயங்கர மோதல்கள், வெட்டுக் குத்துக்கள், பஞ்சாயத்து, உடனே ஒத்துப் போதல், எங்காவது ஒரு வீட்டிலே சாவானால் ஏழூருக்குக் கேட்கும்படியாக ஒப்பாரி வைத்து அழுதல், உருண்டு புரண்டு மாரடித்துக் கொள்ளல், அப்புறம் கொட்டுப் பறை முழக்கங்களோடு சவ ஊர்வலம்; அதில் குஷியாக விசிலடித்துக் கூத்தாடிக் கொண்டும் பாட்டுப் பாடிக்கொண்டும் போதல் — முதலானவற்றையெல்லாம் அவன் கண்டு கேட்டு வியந்தும் வருந்தியும் இருக்கிறான். ஆனால் இவற்றுக்கான அடிப்படைக் காரணம் மட்டும் அவனுக்குப் புரியாமலேயிருந்து, இப்போதுதான் ஓரளவுக்குப் புரியலாயிற்று. அதாவது, பொருளாதாரத்திலும் கல்வியிலும் வஞ்சிக்கப்பட்டு, பழைய பத்தாம் பசலிக் கொள்கை கோட்பாடுகளினால் அடக்கி ஒடுக்கப்பட்ட இவர்கள் தங்களுக்கு ஏற்படும் கோபதாபங்கள், விருப்பு வெறுப்புகள், இன்ப துன்பங்கள், அலுப்புச் சலிப்புகள் ஆகிய மன எழுச்சிகளை அப்போதைக்கப்போது அப்படியப்படியே — எவ்வித மூடு மந்திரமுமின்றிப் பச்சையாகவே — வெளிப்படுத்தி விடுகிறார்கள்!

கல்வி கேள்விகளில் சிறந்து, நாகரிகப் பண்பாடுகளில் உயர்ந்து, செல்வச் செழிப்பிலே திளைப்பவர்களுக்கு இவர்களின் இத்தகைய நடவடிக்கைகளைக்

## இப்படியும்



அட! அவள் கையில் ஒரு பல் செட்! தன் பற்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான் மோகன். அது பத்திரமாய் அவன் வாய்க்குள் இருந்தது!

ஐயோ! ரேவதியின் முகம் ஏன் இப்படிக் கிழவி போல் இருக்கிறது! அவள் கையிலிருப்பது அவள் பல் செட் தானா? அட, ராமா! மோகனுக்குத் தலை சுற்றியது!

— விமலா ரமணி



காண வேடிக்கையாக இருக்கலாம்; விநோதமாகவும் தோன்றலாம். ஆனால் இவை போன்ற விஷயங்களில் அவர்களின் நடவடிக்கைகள் என்ன?

பக்கத்து வீட்டுக்காரன் மிருதங்க சாதகம் செய்வது அடுத்த வீட்டுக்காரனுக்குப் பிடிக்காது. அதை அவனிடம் இவன் நேரிடையாகச் சொல்லவும் மாட்டான். ஆனால் இல்லாத பொல்லாத விஷயங்களைச் சேர்த்துப் போலீஸுக்கு 'பெட்டிஷன்' எழுதிப் போட்டுவிடுவான். இது பக்கத்து வீட்டுக்காரனுக்கும் தெரியும். ஆனாலும் கறிகாய்க் கடையிலோ பஸ்ஸடியிலோ இருவரும் சந்திக்கும்போது வெகு நேச பாவத்தோடு புன்முறுவல் பூத்துக் கொள்வார்கள்!... ஒரு குமாஸ்தாவுக்குச் சம்பளத்தில் ஐந்து ரூபாய் உயர்த்தப்பட்டிருக்கும். பக்கத்து மேசைக் குமாஸ்தா அதைப் பொறுக்கமாட்டாமல் மேலிடத்துக்கு மொட்டைக் கடுதாசிகள் பறக்க விடுவார். ஆனாலும் இருவரும் சேர்ந்தே டிபன் பண்ண ஹோட்டலுக்குப் போவார்கள்!... ஒரு சர்க்கார் அதிகாரி தமது சகாவான இன்னோர் அதிகாரியிடம் அவசரத்துக்குக் கைமாற்றாக ஐம்பதோ நூறோ பணம் கேட்டு வாங்குவார். சரியாக ஒரு மாசம் போகும்; பணத்தைத் தரச் சொல்லித் தமது வேலைக்காரனிடம் கடிதம் எழுதி அனுப்புவார் கடன் கொடுத்தவர். கடன் வாங்கியவர் அந்தக் கடிதத்தின் பின்னும் அடுத்த மாதம் தருவதாகத் தவணை சொல்லி எழுதி அனுப்புவார். கடன் கொடுத்தவர் அக்கடிதத்தையே 'புரோ-நோட்டாக' வைத்துக்கொண்டு வக்கீல் நோட்டீஸ் ஒன்று விடுவார். அடுத்த நான்காம் நாள் கடன் வாங்கியவரிடமிருந்தும் ஒரு வக்கீல் நோட்டீஸ் போகும். அதில், கடன் கொடுத்தவர் பணம் கேட்டு எழுதிய கடிதத்தில் சில வார்த்தைகள் தம் கௌரவத்தைப் பாதிக்கும் வகையில் பிரயோகப்படுத்தியிருப்பதாகக் குற்றம் சாட்டி, அதற்காக மானநஷ்ட வழக்குத் தொடரப் போவதாக மிரட்டியிருப்பார். அடுத்துச் சில மாதங்களில் இரண்டு பேர்களுடைய வக்கீல்களும் கோர்ட்டில் சட்ட சம்பந்தமான வார்த்தைகளைக் கொண்டு சண்டைக் கோழிகள் மாதிரி ஒருவரை ஒருவர் தாக்கி வாதமிட்டுக்கொண்டிருப்பர். இங்கே அவ்விரு அதிகாரிகளும் சேர்ந்து கிளப்பில் வெகு உற்சாகமாகச் சீட்டோ, பில்லியர்ட்ஸோ விளையாடிக் கொண்டிருப்பார்கள்!.... கல்லூரியில் படிக்கும் ஒரு மாணவன் தன் வகுப்பு மாணவி பொருத்தமாகக் காதலிப்பான். ஸ்கூட்டரில் இருவரும் சினிமா, பீச் என்று சுற்றிக் கொண்டிருப்பார்கள். திடீரென்று ஒரு நாள் அந்தக் காதலர் பதிவுத் திருமணம் செய்துகொண்டதாகவும் பெற்றோர்களுக்கு எட்டும். தமக்குத் தெரியாமலே சம்பந்திகளாகிவிட்ட அவர்கள் இரகசியமாகக் கூடிப் பேச்சு வார்த்தைகள் நடத்துவார்கள். அப்புறம் 'பெரியோர்கள் நிச்சயித்தபடி ஒரு சுபயோக சுபதினத்தில் சாஸ்திரோக்தமாக'க் கல்யாணமும், எங்காவது ஒரு ஹோட்டலில் வரவேற்பு விருந்து வைபவமும் ஜாம் ஜாமென்று நடந்து முடிந்துவிடும். அப்போது பெண் மூன்று மாசம் முழுகாமலிருப்பாள். காஞ்சீபுரம் பட்டுப் புடவை அதை வெகு கச்சிதமாக மூடி மறைத்துவிடும்!... கணவன் ஸ்கூட்டரை எடுத்துக்கொண்டு டென்னிஸ் விளையாடிவிட்டு வரக் கிளம்புவான்; மனைவி காரில் வேலைக்குப் போவாள். ஐந்தாறு மாதங்களுக்குப் பிறகு இருவரும் எதிர்பாராத விதமாக எலியட்ஸ் பீச்சில் சந்தித்துக்கொள்வார்கள். அப்போது அவன் பக்கத்தில் அவனுக்கு அறிமுகமில்லாத ஒரு பெண்ணும், அவளருகில் அவனுக்குப் பரிச்சயமில்லாத ஓர் ஆடவனும் திருதிருவென விழித்துக்கொண்டு நிற்பார்கள். அன்று முதல் அவ்விரு ஜோடிகளும் பரஸ்பரம் மனம் விட்டுப் பேசிக்கொண்டு பிரிந்து வாழ முடிவு செய்வார்கள். ஐந்து வருஷங்களுக்குப் பிறகு கோர்ட்டில் சாவதானமாக அவர்களுடைய விவாகரத்து வழக்கு நடந்து முடியும். ஆனாலும் அந்த மாஜி கணவனும் மனைவியும் தத்தமது பிறந்த நாளன்று மறக்காமல் வாழ்த்துக்களும் பரிசுகளும் அனுப்பிக்கொள்வார்கள்!... மாமனார் தீபாவளிக்கு வாங்கித் தருவதாகச் சொன்ன வைர மோதிரம் கிடைக்காமற் போன கோபத்தில் கணவன் மனைவியை வார்த்தைகளால் குத்திப் பேசுவான்; அதைப் பொறுக்க மாட்டாமல், மனைவி தன் வைரக் கம்மலை நொறுக்கிக் காப்பியில் கலந்து குடித்து விடுவாள்!...

இப்படி வறுமையாலும் அறியாமையாலும் ஒரு சாரார் தம் மன எழுச்சிகளையும் சிர உணர்ச்சிகளையும் கட்டுப்பாடின்றிக் காட்டு மிராண்டிகள் போலவும் குழந்தைத்தனமாகவும் வெளியிட்டு நடந்து கொள்ளுகின்றனர் என்றால், செல்வமும் கல்வியும் நாகரிகமும் சேர்ந்து இன்னொரு சாராரை இருதயமற்ற இயந்திரப் பதுமைகள்

போல் மனச்சாட்சியும் மனித உணர்ச்சிகளும் வற்றிப் போனவர்களாக்கிப் போலி வேடம் போட்டு நடிக்க வைக்கின்றன. இன்றைய சமுதாயத்தின் இவ்விரு மூலியான வார்ப்புக்களுமே ஒரு நேரான வடிவில் நிரந்தரமாக நிமிர்ந்து உருவாவது எங்ஙனம்? இதற்கென்றே இந்த நாட்டில் இன்னொரு காந்தி மகான்தான் பிறந்தாக வேண்டும்; வேறு வழியில்லை!...

இரவு நேரத்தின் நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு ''ஐயோ, மவனே!.. நச்சி தொரே! என் நெஞ்சிலே கல்லைத் தூக்கிப் போட்டுடாதேடா ராசா!''- என்று அரற்றியவாறு தொலைதூரத்தில் ஓடிய கன்னியம்மாளின் ஓலக்குரல் கேட்டுத் தன் சிந்தனையிலிருந்து விடுபட்டான் சபேசன். அந்த ஏழைத் தாயின் புத்திர பாசப் புலம்பல் ஒலி அவன் மனத்தைக் கலக்கிக் குழப்பியது. 'கிராமத்திலிருக்கும் என் அன்னையும் இப்படித்தானே என்னைக் காணாமல்—என்னைப் பற்றிய நினைவாகக் கிடந்து— அழுது புலம்பி அலைமோதிக்கொண்டிருப்பாள்?'

அந்த நிமிடமே ஊருக்குப் பயணமாகிவிட வேண்டுமென்ற ஓர் ஆவேசத் துடிப்புடன் அங்கிருந்து விரைந்து நடந்த அவன் சற்றுத் தூரம் சென்றதும், 'என்ன இது பைத்தியக்காரத்தனம்! இந்நேரத்தில் எனக்கென்று தனியாக ரயில் ஓடுமா? இன்னும் ஒரே ஒரு நாள்தான். நாளை இந்நேரத்துக்கு ஆனந்தமாகப் பயணம் செய்துகொண்டிருப்போம்' என்று தன்னைத் தானே சமாதானப்படுத்தியவனாய் நடையின் வேகத்தைக் குறைத்துச் சாவதானமாக நடக்கலானான். அவனுடைய மனம் நாளைய பயணத்தைப் பற்றிய இனிய கற்பனைகளில் சுகிக்கத் தொடங்கியது.

'துணிந்தவனுக்குத் துக்கம் இல்லை' என்ற முதுமொழி சபேசனைப் பொறுத்த வரையில் அன்று மெய்யாகி விட்டது. ஆமாம்; அன்றிரவு அந்த மன்றோ சிலையின் அடி வட்டத்தில் படுத்து நிம்மதியாகத் தூங்கியபோது யாருமே வந்து 'எதற்கும் தயார்' நிலையிலிருந்த அவனை எவ்வித சோதனைக்கும் உள்ளாக்கவில்லை!

விடியற்காலை ஆறு மணிக்கு எழுந்து வேலியோரக் குழாயடியில் - சென்னை நகர வாழ்க்கைக்கே ஒரு முழுக்குப் போடுவதாக எண்ணிக்கொண்டு - தலையோடு குளித்துவிட்டு, பைஜாமாவை மட்டும் துவைத்து உலரப்போட்டு அணிந்துகொண்டான். மேல் சட்டையை அவன் பல நாட்களாகத் துவைப்பதே இல்லை. காரணம் தெரிந்ததுதானே?

மகிழ்ச்சியும் சுறுசுறுப்புமாக மாதவன் நாயர் டீக்கடைக்குப் பின்னால் வந்து உட்கார்ந்த சபேசன், தன்னை மீறிய ஆவலோடு தன் சட்டையைப் பிரித்து மடியில் போட்டுக்கொண்டு ஏதோ ஓர் இரகசியமான காரியத்தைச் செய்யப் போகிறவன் போல் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனைக் கவனிப்பவர்கள் அங்கு யாரும் இல்லை என்பது நிச்சயமான பின் சட்டைப் பித்தான் மடிப்பில் அடக்கமாகியிருந்த ரூபாய் நோட்டுக்களை மெல்ல வெளியே எடுப்பதில் முனைந்தான். கைதேர்ந்த டாக்டர் ஒருவர், கஷ்டப் பிரசவத்துக்காளான ஒரு தாய்க்கும் சேய்க்கும் எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடக் கூடாதே என்ற கவலைப் பொறுப்புடன் 'சிஸேரியன் ஆபரேஷன்' முறையைக் கையாள்வதுபோல் அத்தனை கவனமாக அந்தக் காரியத்தில் ஈடுபட்டான். ஆனால் வெகு நேரமாகியும் பணத்தை வெளியே எடுக்க முடியவில்லை. பொறுமை இழந்த அவன், அழுக்கேறி நைந்து போயிருந்த சட்டைப் பித்தான் மடிப்பை 'டர்'ரென்று கிழித்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவசரமாக எண்ணிப் பார்க்கலானான். அடேயப்பா! தொண்ணூற்றைந்து ரூபாய் இருக்கிறதே!

பெருமையால் நெஞ்சம் பூரித்துக் குதூகலித்த அவனுக்கு, எழுந்து கூத்தாட வேண்டும் போல் இருந்தது. ஆனாலும் ஒரு வருத்தம்: 'நூறு ரூபாய்க்கு ஐந்து ரூபாய் குறைந்து விட்டதே! இது தெரிந்திருந்தால் இரண்டு நாட்கள் பட்டினி கிடந்தாவது ஐந்து ரூபாய் மிச்சப்படுத்தி இத்துடன் சேர்த்துச் சுளையாக நூறாக்கியிருக்கலாம்!'

'போனால் போகட்டும்' என்று அலட்சியமாக எழுந்த அவன் ரூபாய் நோட்டுக்களைப் பத்திரமாக மடித்து உள்ளங்கையில் இறுக்கிக்கொண்டு அந்தச் சட்டையை அணிவதற்காக எடுத்தான். அழுக்கேறி நைந்து கிழிந்திருந்த அதைப் பார்க்கவே அவனுக்கு அருவருப்பாக இருந்தது. 'இவ்வளவு நாட்கள் இதையா போட்டுக் கொண்டிருந்தேன்!' என்று ஆச்சரியப்படுகிறவன் போல் அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்து விட்டு முகத்தைச் சுளித்தான். பிறகு சட்டென்று தனக்குள் நகைத்தவாறு,

'சே, இந்த மனம்தான் எத்தனை மோசமானது! இதே சட்டையைச் சற்று முன் யாராவது சும்மா தொட்டிருந்தால்கூட ஒரு ஜீவ மரணப் போராட்டம் நடத்தத் தயாராகி யிருப்பேன் என்பது இப்போது முற்றிலும் மறந்தே விட்டதே!' என்று முணுமுணுத்துக் கொண்டான். 'வெறும் உடம்போடு கடைத் தெருவுக்குப் போக முடியாது. புதுச் சட்டை வாங்கும்வரையில் இதைத்தான் போட்டுக் கொள்ள வேண்டும். வேறு வழியில்லை.'

வெறுப்பும் அருவையுமாக அந்தச் சட்டையை அணிந்துகொண்டு அங்கிருந்து உற்சாகமாகப் புறப்பட்டான் சபேசன்.

அவன் திட்டமிட்டபடி வாங்கவேண்டிய பொருட்களையெல்லாம் வாங்கிக்கொண்டு, குறித்த நேரத்தில் ஸ்டேஷனுக்குப் போகத் தோதாக கிப்பன் மாளிகையண்டை வந்து சேர்வதற்கும் மாலை மணி ஆறுவதற்கும் சரியாக இருந்தது. அடேயப்பா, இதற்குத்தான் அவன் எங்கெங்கெல்லாம் சுற்றி அலைந்து, எத்தனை யெத்தனை கடைகளில் ஏறி இறங்கிவிட்டான்! ஆயினும் தான் வாங்கிய பொருட்களில் ஏற்பட்ட திருப்தி அந்தக் கஷ்டங்களையெல்லாம் ஓர் இன்ப அநுபவமாக அவனைக் கொள்ளச் செய்தது. அத்துடன், ஏழுமலையான் அச்சக உரிமையாளர் கண்ணபிரானை மறக்காமல் போய்ப் பார்த்துத் தான் ஊருக்குப் போகவிருக்கும் செய்தியைச் சொல்லி, அவரது உளங்கனிந்த புத்திமதிகளையும் ஆசிகளையும் பெற்றுக்கொண்டு வந்தது அவன் மனத்துக்குப் பெரிதும் ஆறுதலாக இருந்தது. மேலும், அன்று காலை கடைசியாக ஒரு முறை துறைமுகத்துக்குப் போய் பர்மா அகதிகளை ஏற்றி வரும் மூன்றாவது கப்பலைப் பற்றி விசாரித்தபோது நிச்சயமான தகவல் எதுவும் கிடைக்காமல் போனதும் ஒரு விதத்தில் அவனுக்கு நிம்மதி தந்தது. காரணம், அந்தக் கப்பல் வரும் நாள் தெரிந்தால் தன் தந்தை அதிலே வருவாரோ என்ற நைப்பாசையில் அவன் இன்னும் சில தினங்கள் இங்கு இருந்தாக வேண்டிய அவசியம் ஏற்படலாம் அல்லவா?

கிப்பன் மாளிகை எதிரே - சத்தியமூர்த்தி சிலைக்குப் பின்னால் - புல் தரையில் உட்கார்ந்து கொண்டிருந்த சபேசன் ஆறே கால் மணிக்குரிய இசையொலி கேட்டுச் சுறுசுறுப்படைந்தவனாய் எழுந்தான். மனத்தில் மகிழ்ச்சிக் குதி போடப் புதிய பாண்டையும், ஸ்லாக் சட்டையையும் எடுத்து உடுத்திக் கொண்டு, புதிதாக வாங்கிய ஹவாய் சிலிப்பரை அணிந்து கொண்ட பின் தன்னையே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தபோது பெருமையால் அவன் நெஞ்சு விம்மிப் பூரித்தது.

ஆனால் அத்துடன் திருப்தியடைய அவனால் முடியவில்லை. தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற ஆவலும், தலை வாரிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையும் எழவே, 'அடடா! ஒரு சீப்பும் கண்ணாடியும் வாங்க மறந்துவிட்டோமே!' என்று கையை உதறிக்கொண்டான். உடனே அவன் மனத்தில் இன்னொரு நினைவும் சிலிர்த்துக்கொண்டு எழுந்தது. ஆமாம்; அன்றொரு நாள் வேதா அவனுக்குத் தலை வாரிக்கொள்ளச் சீப்புக் கண்ணாடி கொடுத்த சம்பவத்தைத்தான் இப்போது நினைத்துக்கொண்டான்.

(தொடரும்)



1. பாவம்! தனியே நின்ற ஆட்டைக் கம்பால் அடித்தான் மணி. ஆட்டுக்கும் பிரமாதமான கோபம் வந்தது. சற்று நேரத்துக் கெல்லாம் இதை மறந்து மணி தன் ஸ்நேகிதன் கிட்டுவுடன் கண்ணாமூச்சி



2. விளையாடத் தொடங்கினான். கிட்டு கண்ணைப் பொத்திக் கொள்ள, மணி சாலையில் கிடந்த ஒரு பெரிய குழாயில் ஒளிந்தான். ஆட்டை அடித்த ஞாபகமே அவனுக்கு இல்லை. 'ஜுட்' என்று குரல் கிளப்பினான். அடிபட்ட ஆடு கோபம் கொண்டு அவனைப் பழிவாங்க வந்தது.



3. அவன் ஒளிந்து கொண்டிருந்த பெருங் குழாயை ஓடிவந்து பலமாக முட்டியது. குழாய் மேட்டிலிருந்து வெகு வேகமாகப் பள்ளத்தில் உருண்டது. இன்னும் கண்ணைப் பொத்திக்கொண்டு நின்ற கிட்டு தன் காலடியில் 'தடபுட' சத்தம் கேட்டுத் திடுக்கிட்டான்.



4. உருளும் குழாயில் மணி உருண்டு போவதைக் கவனித்தான். குழாய் பள்ளமான சாலை வழியே உருண்டு ஓடியது. ஆடும் நின்றது. கிட்டு அதனுடன் ஓடினான். கடைசியில் குழாய் ஒரு வீட்டு வாசலிலிருந்து தப்பி ஓடிய திருடன்மீது



5. தாக்கியதும், திருடன் உருண்டான். உடனே எல்லோரும் கூடித் திருடனைப் பிடித்துக்கொண்டு மணியை வாழ்த்தினார்கள். மணி இதற்குத் தான் காரணமில்லை என்றும் அந்த ஆடுதான் காரணம், அதைத்தான் பாராட்ட வேண்டும் என்றும் உருண்ட மயக்கத்தோடு கூறினான்.



6. உடனே மாலையை எடுத்துக் கொண்டு எல்லோரும் ஆட்டை நோக்கிப் பறந்தார்கள். ஆடு விஷயம் தெரியாமல், தன்னை அவர்கள் துரத்துவதைப் பார்த்துப் பயந்து ஓட்டமெடுத்தது.

## ரேடியோவைக் கேளுங்கள்

“குமாரி பர்வதத்தின் உயர்ந்த சங்கீதத்தைக் கேட்டு ரேடியோ டைரக்டர் மூர்ச்சையானார்” என்னும் துமிலனின் கிண்டல் வரிசைக் கதையைப் பார்த்து ஒரு புறம் ஆச்சரிய உணர்ச்சியும், மறுபுறம் துக்கமும் உண்டாயின. ரேடியோ ‘ஆடிஷன் டெஸ்ட்’டில் நடைபெறும் இன்னல்களையும் நல்ல பாடகர்கள் எந்த முறையில் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்பதையும் மிகவும் தெளிவான முறையில் ஹாஸ்ய நடையிலேயே விளக்கிய ‘துமிலன்’ அவர்களுக்குக் ‘கல்கி’ வாசகர்களும், ரேடியோ ரசிகர்களும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

‘கல்கி’ போன்ற பத்திரிகைகள் ரேடியோவில் நடைபெறும் கச்சேரிகளின் தரத்தைக் குறித்து அடிக்கடி புத்திமதியும் மதிப்புரையும் வழங்கி வருவதைக் கடமையாகக் கொண்டால், என்னைப் போன்ற ‘நல்ல’ சங்கீதம் கேட்கப் பிரியமுள்ளவர்கள் லாபமடைவார்கள்.

திருவையாறு,
18–6–65 கங்காநாத்

## பஞ்சாயத்துக் குளறுபடிகள்

பஞ்சாயத்து யூனியன் தலைவர்களின் அதிகாரத்தைக் குறைத்து விட்டதாக அதன் தலைவர்களின் சங்கம் மிகவும் வருத்தப்பட்டு மாகாண முதலமைச்சரிடம் தூது சென்று முறையிட்டதுடன் இப்போது உண்ணாவிரதமும் இருப்போம் என்று மிரட்டுகிறது. இவர்களுடைய அளவு மீறிய அதிகாரத்துக்குப் பலியான ஆசிரியர்கள் எண்ணிலடங்கார். செல்வாக்குள்ள ஆசிரியர்களுக்குச் சிறப்பான இடமும், அப்பாவி ஆசிரியர்களுக்கு அடிக்கடி அநாவசிய மாற்றல் உத்தரவுகளும் போட்டுப் பலரைப் பலியிட்டார்கள். அதுமட்டுமன்றி, பஞ்சாயத்து–பஞ்சாயத்து யூனியன் முதலியவைகளுக்குச் சொந்தமான காண்ட்ராக்ட் வேலைகளில் பெரும் பகுதி தலைவர்களுக்குத் தொடர்புண்டு. தமது பெயரில் காண்ட்ராக்ட் எடுக்கச் சட்டத்தில் இடம் இல்லை என்ற காரணத்தால் தமக்கு வேண்டிய பல நண்பர்கள் பேரில் காண்ட்ராக்ட் எடுத்து இவர்களே வேலைகளைச் செய்து நல்ல விதமாகச் சம்பாதித்துத் தங்கள் வாழ்வை வளப்படுத்திக் கொண்டார்கள். ‘இல்லை’ என்று யாரேனும் மறுப்பார்களேயானால் சமீபத்தில் நடந்த பஞ்சாயத்துத் தேர்தலின்போது நடந்த கொலைகளும், குத்து, வெட்டு, அடிதடிகளுமே சான்றுகள் ஆகும். எதற்காக இவைகள் எல்லாம் நடந்தன? பதவி ஆசையா? இல்லை. பதவியின் காரணமாகக் கிடைக்கின்ற பணத்தின் மீது உள்ள ஆசைதான் காரணம். இன்னும் தகுந்த காரணம் வேண்டுமானால் முடிவடைந்த பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், தலைவர்கள் 1957–58ல் பதவி ஏற்றபோது அவர்கள் தகுதி என்ன, சொத்து எவ்வளவு, பணப் புழக்கம் எவ்வளவு என்றும், அதே நோக்கில் அவர்கள் சுமார் ஐந்தாண்டுகள் பதவியில் இருந்த பிறகு இன்று அவர்களது தகுதி என்ன, சொத்து என்ன, பணப் புழக்கம் எவ்வளவு என்றும் தகுந்த நேர்மையான அதிகாரியை விட்டுக் கணக்கு எடுக்கச் சொன்னால் அவர்களது நேர்மையின் சாயம் வெளுத்துவிடும். ஆகவே, அவர்களது அதிகாரத்தைக் குறைக்க வேண்டியது முற்றிலும் நியாயமே. மகான் காந்திஜி அவர்கள் அதிகாரம் பரவலாக இருக்க வேண்டும், அது பஞ்சாயத்து–ராஜ்யமாக வேண்டும், அப்போதுதான் அது கிராம ராஜ்யமாக அதாவது “ராம ராஜ்யமாக” இருக்கும் என்று கனவு கண்டார். ஆனால் காந்திஜி கனவு பகல் கனவாக மாறி ராம ராஜ்யமாக வேண்டிய நாடு பொதுமக்களுடைய பஞ்சாயத்து வரிப் பணத்துக்கு நாமம் போடும் ராஜ்யமாக மாறக்கூடிய நிலை ஏற்பட்டு விட்டது.

திருத்துறைப்பூண்டி, ஆர். கணபதி.
1–7–65 அங்கத்தினர், த.ம.கா. கமிட்டி.






## நினைவு வளைவு அவசியமா?

இரண்டு தினங்களுக்கு முன்பு உள்ளூர்ச் செய்திப் பத்திரிகை ஒன்றில் அகில இந்திய காங்கிரஸ் தலைவர் திரு காமராஜ் அவர்களின் அறுபத்தி மூன்றாவது பிறந்த தின நினைவாக பெலப் புலிவார்டு ரோட்டில் ரூ. 11500 நகராட்சி செலவில் ஒரு வளைவு கட்டுவதாக நகர மன்றம் தீர்மானித்திருந்ததாகச் செய்தி பார்த்தேன்.

இது உண்மையான செய்தியானால் இது தேவையற்ற ஒரு முடிவு என்பதனைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நகரில் ஏற்கனவே திரு காமராஜருக்கு ஏராளமான நினைவுச் சின்னங்கள் உள்ளன.

அன்றியும் திரு காமராஜ் அவர்கள் ஓர் அரசியல் கட்சியின் தலைவர். காங்கிரஸ் கட்சியின் தலைவர். இத்தகைய நினைவு வளைவுகள் காங்கிரஸ் கமிட்டியினர் போடுவதுதான் சரியானது. அல்லது யாராவது வசதி படைத்தவர் இப்படி ஒரு வளைவு போட்டு நகராட்சிக்குக் கொடுத்தாலும் பரவாயில்லை.

காவிரிப் பாலம் அருகே ஒரு பாலம் அமைத்து மேலச் சிந்தாமணியையும் கீழச் சிந்தாமணியையும் இணைப்பதற்குச் சுமார் பத்தாயிரம் ரூபாயில் ஒரு திட்டம் ஏற்கனவே உள்ளது. இம்மாதிரி ஏராளமான திட்டங்கள் நிறைவேற இருக்கிறபோது இத்தகைய ஒரு நினைவு வளைவு அவசியமா?-அதுவும் ஒரு நெருக்கடி மிகுந்த இடத்தில்.

வரி கொடுக்காவிட்டால் தண்டோராப் போட்டு, தமுக்கடித்து, சட்டி – பானைகளைத் தூக்கிக் கெடுபிடி செய்து வசூல் செய்த ஏழைகளின் வரிப் பணத்திலிருந்து தேவையற்ற ஒரு நினைவுச் சின்னத்தை அமைப்பது முற்றிலும் தவறு.

சென்னை நகராட்சி சட்ட 37வது விதிகளின்படி கலெக்டருக்கு உள்ள விசேஷ அதிகாரங்களைப் பயன்படுத்தி மேற்படி வளைவு போட வந்துள்ள தீர்மானம் ரத்து செய்யப்பட வேண்டும்.

திருச்சி
27-6-65

ஆர். நாகசுந்தரம்,
முன்னாள் எதிர்க் கட்சித் தலைவர்









## ஆசிரியர் பென்ஷன்

ரிடையரான ஆசிரியர்களில் பெரும்பாலோர் தற்போது பத்து ரூபாயிலிருந்து பதினைந்து ரூபாய் வரைதான் பென்ஷன் பெற்று வருகிறார்கள். விலைவாசிகள் ஏற்றத்தால் மதிப்புக் குறைந்து போன அவர்கள் சேமிப்புப் பணம் (பிராவிடண்ட்பண்டு) தவிர வேறு எந்த ஆதாரமும் இன்றி ரிடையரானவர்கள்தான் முக்கால்வாசிப் பேர்கள். இந்தப் பணமும் இரண்டொரு ஆயிரத்துக்கு மேல் யாருக்கும் கிட்டியதில்லை. இந்தச் சிறு தொகையை எங்காவது வட்டிக்கு விட்டு அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் பென்ஷனையும் சேர்த்தால் 20, 25க்கு மேல் போகாது.

ஓய்வு பெற்ற ஆசிரியர்களின் வாழ்க்கை எப்படி இருக்கும் என்று சொல்ல வேண்டியதேயில்லை.

முதியோர் பென்ஷன் அளவுக்காவது ஆசிரியர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று இது வரை சர்க்காருக்குத் தோன்றாதது பெரிய ஆச்சரியமாகும். பார்க்கப் போனால் ஓய்வு பெற்ற ஆசிரியர் எண்ணிக்கை பத்தாயிரத்துக்கு மேல் இல்லை. வருஷத்தில் பத்து அல்லது பதினைந்து லட்சம் செலவாகும். மற்ற சர்க்கார் செலவினங்களோடு இதை ஒப்பிட்டுப் பார்த்தால் இது ஒரு துளிதான். ரிடையரான அரசாங்க ஊழியருக்குச் சம்பளத்தில் பாதி பென்ஷன் கிடைப்பதோடு கிராக்கிப்படி வேறு கிடைக்கிறது. ஆசிரியர்களுக்கு மட்டும் இந்தச் சலுகை ஏன் மறுக்கப்பட வேண்டும்?

இவ்விஷயத்தில் நீதி வழங்கி ஆசிரியர் தொழிலின் மதிப்பை அரசினர் உயர்த்துவதன் மூலம் இந்நாட்டின் கல்வித்தரத்தையும் உயர்த்தியவர்களாவார்கள்.

ஆரணி
17-6-65

ச. ஸ்ரீநிவாசன்



# அகிலன் எழுதும்

வேலைக்குக் கிளம்பிய நடேசன் சைக்கிளில் ஏறிக் கொண்டவுடன் தன் மனைவி கோகிலாவைப் பார்த்துக் குறும்புத்தனமாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பு அவளுக்கு எரிச்சலைத் தந்தது. முகத்திலடித்தது போல் பதில் சொன்னதுமல்லாமல் சிரிப்பு என்ன வேண்டிக் கிடக்கிறது? கோகிலாவுக்கு அழுகையும் ஆத்திரமும் தாங்க முடியவில்லை.

நடேசன் தெருவுக்குச் சென்று மறைந்து விட்டான். வீட்டுக்குள் திரும்பிய கோகிலாவின் கண்கள் குளங்களாக மாறின. அற்ப சந்தோஷத்துக்குக்கூட இடம் கொடுக்காத ஒரு மனிதனோடு வாழ்க்கை நடத்துவது வாழ்க்கைதானா என்ற சந்தேகம் வந்து விட்டது அவளுக்கு.

இன்றைக்கு நடந்த விஷயம் இவ்வளவு தான்:

காலையில் அவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையெல்லாம் வழக்கம்போல் அவசரம் அவசரமாகச் செய்து முடித்தாள். சாப்பாடு போட்டு, பிற்பகலுக்கான சிற்றுண்டியையும் அவனிடம் கொடுத்து, "இன்றைக்குச் சாயங்காலமாவது சீக்கிரம் திரும்பி விடுவீர்களா?" என்று ஏக்கத்தோடு கேட்டாள்.

'சாயங்காலமாவது' என்ற சொல்லின் அழுத்தத்தைப் புரிந்து கொள்ளாதவன்போல் "என்ன விஷயம்?" என்று கேட்டான் நடேசன்.

"வெளியில் எங்காவது போய் வரலாம்; காசு செலவழிக்க வேண்டாம்; நடந்தே போகலாம்" என்றாள் கோகிலா.

பட்டணத்தின் அலங்கோலம் காக என்பதையும் அதைத் தான் மறந்து விடவில்லை என்பதையும் அவள் அவனுக்குச் சுட்டிக் காட்டினாள். இப்படிப் பேசினால் தனக்குச் சாதகமாகப் பதில் கிடைக்கும் என்று அவளுக்கொரு நம்பிக்கை.

"இன்றைக்கு முடியாது!" என்று சொல்லி அந்த நம்பிக்கையில் மண்ணைப் போட்டான் நடேசன்.

கோகிலாவின் முகத்தில் வெறுப்புப் படர்ந்தது.

"நாளைக்குப் போவோம்; ஞாயிற்றுக் கிழமையாகவும் இருக்கிறது."

"நாளைக்கு என்னால் வர முடியாது!" என்று வீம்பு பேசினாள் கோகிலா.

"அப்படியானால் இன்றைக்கு என்னால் வர முடியாது; வேலை இருக்கிறது" என்று சிரித்துக் கொண்டே கூறினான் நடேசன். அந்தப் பதிலும் சிரிப்பும்தான் அவளை இப்போது பற்றி எரியச் செய்தன. இன்றைக்கு நடந்த விஷயம் இவ்வளவுதான் என்றாலும் வாரக் கணக்கில், மாதக் கணக்கில், அவள் தனக்குள் புழுங்கிக் கொண்டிருந்தாள். அந்தப் புழுக்கத்திலிருந்து மீளுவதற்காகத்தான் இன்று நடேசனிடம் தானே அழைப்பு விட்டாள். ஆனால் அது முன்னிலும் பன்மடங்காகி அவள் உள்ளத்தைக் கசக்கிப் பிழியத் தொடங்கியது.

வீட்டுக்குள் நுழைந்தவளுக்குத் தனிமையில் சிறிது நேரம் கண்ணீர் விட்டு அழ வேண்டும் போலிருந்தது. அழுதாள். பிறகு நிலைக் கண்ணாடியின் எதிரில் நின்று தன் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

கண்ணாடியில் தெரிந்த அவள் முகமே இப்போது அவளுக்குப் பகையாயிருந்தது. பிறப்பு முதல் இது நாள் வரையிலும் அவள் காணும் முகந்தான் அது. என்றாலும் சில நாட்களாகவே அவள் அதில் குறை காணத் தொடங்கி விட்டாள்.

கோகிலாவின் முகத்தில் காண்போரைக் கவர்ந்திழுக்கும் அழகில்லை. நிறமும் சிறிது கறுப்புத்தான். ஒல்லியாகச் சற்று நீண்டிருந்த முகத்தில் கண்கள், புருவங்கள், மூக்கு, உதடுகள் எல்லாமே இருக்கவேண்டிய இடத்தில்தான் கச்சிதமாக இருந்தன. கூந்தல் மட்டிலும் நெளி நெளியாக அடர்ந்து காடுபோல் மண்டிக் கிடந்தது. என்றாலும் அவள் தான் அடுத்த வீட்டுக்குக் குடிவந்திருக்கும் கல்யாணியைப் போல் பேரழகியாக இருக்கவில்லையே என்று வருத்தப்பட்டாள்.



பூக்கடைக்கு விளம்பரம் தேவையில்லை. அதன் மணமே கட்டிக் காட்டிவிடும். அகிலனைப் பற்றிக் கூறுவதும் அப்படித்தான். இதோ 'அமுதின் ரகசிய'த்தில் உணர்ச்சிக் கொந்தளிப்புக்களைச் சித்திரிக்கும் அழகைக் காணுங்கள் :

"கல்யாணி!" என்று கத்தினான் சிங்காரம்- "நீ எங்கே போயிருந்தாய் என்பதைச் சொல்லிவிடு!"

"நீங்கள் எனக்குப் புருஷனில்லை; போலீஸ்காரர்!" — திருப்பிக் கத்தினாள் கல்யாணி. "தபால், தந்தி, டெலிபோன், எப்போதும் நிழல்போல் என்னைப் பிரியாமல் இருப்பது இவ்வளவுமே வேஷம்! அன்பென்றால் அங்கே அணுவளவாவது நம்பிக்கை யிருக்கும்!"

கல்யாணிக்கு நீண்ட கண்கள்; அவற்றில் மயக்கும் கருவிழிகள் இரண்டு. பட்டுரோஜா போன்ற சிவந்த மிருதுவான உதடுகள்; மாம்பழக் கன்னங்கள். சந்தனக் குழம்பால் உருவாக்கப் பெற்றவள் போல் தோற்றமளித்தாள் கல்யாணி. அவள் கணவன் சிங்காரமோ அவளைக் கண நேரமும் விட்டுப் பிரிந்திருப்பதில்லை.

'வாழ்ந்தால் கல்யாணியைப் போலவும் சிங்காரத்தைப் போலவும் அல்லவோ வாழ வேண்டும்!' என்று அக்கம் பக்கத்தார் பேசிக் கொள்ளும் அளவுக்கு அவர்கள் இணக்கமாக வாழ்ந்தார்கள். கோகிலாவுக்கு அவர்கள் வாழ்க்கையோடு தன் வாழ்க்கையை ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. கல்யாணியோடு தன்னையும் சிங்காரத்தோடு நடேசனையும் அடிக்கடி ஒப்பிட்டுக் கொண்டாள். கல்யாணி கோகிலாவைவிட அழகி; ஆனால் அவள் கணவன் நடேசனைப் போல் அவ்வளவு அழகன் என்று சொல்ல முடியாது.

இந்த நிலையில் கோகிலா தாயாகிக்கொண்டு வந்தாள். இரண்டு மாதங்களுக்கு மேலாகி விட்டது. இந்த இரண்டு மாதங்களாகத் தான் அவளுக்குத் தன் குறை நன்றாகத் தென்படத் தொடங்கியது. அவள் கணவன் நடேசன் முன்போல் அவளிடம் அன்பாக நடந்து கொள்வதில்லை. புதிதாகக் குடி வந்த கல்யாணியின் வாழ்க்கைப் போக்கு கோகிலாவுக்கு அதைக் கூர்மையாகவே எடுத்துக் காட்டியது. 'கண்ணுக்கு அழகாக இருந்தால் அவர் இப்படியெல்லாம் என்னை அலட்சியம் செய்திருக்க மாட்டார்' என்று தனக்குத்தானே முடிவு செய்து கொண்டாள் கோகிலா.

* * *

எதிர்பாராதவிதமாக அன்றைக்குக் கோகிலாவைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தாள் கல்யாணி. ஒரே காம்பவுண்டுக்குள் அவர்கள் குடியிருந்தாலும் கல்யாணியின் வீடு பெரிய வீடு. கணவன் வீட்டை விட்டு அலுவலகத்துக்குப் போன பிறகும் அவள் வழக்கமாக வீட்டை விட்டு வெளியே வருவதில்லை. அலுவலகத்திலிருந்த படியே அடிக்கடி டெலிபோனில் அவளைக் கூப்பிட்டுப் பேசுவானாம். அவன் கூப்பிட்ட நேரத்துக்கு அவள் பதில் கொடுக்க வேண்டும்.

ஒரு கண்ணாடி ஜாடி நிறைய மாவடு ஊறுகாய் போட்டுக் கோகிலாவுக்குக் கொண்டு வந்திருந்தாள் கல்யாணி. கல்யாணியின் பிறந்த வீடு மாம்பலத்தில்தான் இருந்தது. தன் தாயாரிடம் சொல்லி வாயும் வயிறுமாக இருக்கும் கோகிலாவுக்காக அதைப் போடச் செய்துகொண்டு வந்திருக்கிறாள்.

கல்யாணியின் அன்பு கண்டு கண் கலங்கிய கோகிலா, "உன்னைப் போலவே உன் மனமும் அழகாக இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே ஊறுகாய் ஜாடியை வாங்கிக்கொண்டாள்.

"நான் அழகாயிருக்கிறேனென்று நீ வேறு சொல்ல ஆரம்பித்து விட்டாயா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் கல்யாணி. அந்தச் சிரிப்பு உற்சாகமற்ற சிரிப்பாக இருந்தது.

"ஏன், நீ அழகி என்பதில் என்ன சந்தேகம்? ஆயிரத்தில் ஒரு பெண்ணை உன்னைப் போல் நான் பார்த்ததில்லை. எனக்கு இதில் எவ்வளவு பெருமை தெரியுமா?"

"நானும் ஒரு காலத்தில் பெருமைப்பட்டுக் கொண்டுதான் இருந்தேன். கர்வப்பட்ட காலமும் உண்டு."

"இப்போதும் நீ பெருமைப்படலாம்; கர்வப் படலாம்" என்று மிகுந்த உற்சாகத் தோடு கூறினாள் கோகிலா.

"கோகிலா, அப்படி நினைப்பது தப்பு!" என்றாள் கல்யாணி. "பிறவியிலேயே ஒவ்வொருவரையும் ஒவ்வொரு விதமாகக் கடவுள் படைத்திருக்கிறார். எல்லோரும் ஒன்று போல் பிறந்துவிட்டால் முகத்துக்கு முகம் வித்தியாசம் தெரியாமல் போய்விடுமே என்றும் அவர் இப்படிப் படைத்திருக்கலாம். நாமாக இதில் பெருமையோ, கர்வமோ அடைவதற்கு என்ன இருக்கிறது? நம்முடைய முயற்சியால் உழைப்பால், குணத்தால் நாம் தேடிக் கொண்டதா இது?"

திடுக்கிட்டாள் கோகிலா. பிறகு "இதைத் தான் பிறவியிலேயே நாம் செய்த அதிர்ஷ்டம் என்கிறேன் நான்" என்றாள்.

"ஊஹூம், நான் எதைச் சொல்கிறேனோ அதை முழு மனத்தோடு நம்பிச் சொல்



## இந்திய நாட்டின் இதயத்தினிலே!

பத்தாண்டுகளுக்கு முன்... பணி துவங்கினோம் முதன்முதலாய். நேற்று நடந்ததுபோலிருக்கலாம். மக்களை நாடி உதவி புரிவதிலே முனைந்துள்ளோம்... நகரங்களிலே, நாட்டுப் புறங்களிலே... காட்டுத் தலங்களிலே, மேட்டு வெளிகளிலே... மாளிகைகளிலே, மண் குடிசைகளிலே... எங்கும் உள்ள பலதரப்பட்ட மக்களுக்கு! துணையகங்கள் உட்பட 1800க்கும் மேற்பட்ட அலுவலகங்கள் எங்களுக்கு உள்ளன ஊழியம் புரிய. எங்கள் பணியோ இப்போது தான் துவக்கம் பெறுகிறது எனலாம். பல்லாண்டு பல்லாண்டு காலம் இன்னமும் உன்னத பணிபுரிய. இந் நன்னாள் ஸ்டேட் பாங்கிலுள்ள நாங்கள் பாரத நாட்டுக்கும் மக்களுக்கும் நற்பணி புரிவதிலே எங்களையே அர்ப்பணித்துக்கொள்ளப் புதிதாக ஆணை எடுத்துக்கொள்கின்றோம்.

**சேவை புரிந்திடவே ஸ்டேட் பாங்க்**

LPE-Alvars S. 1 TM A

## உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

### பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

*BP(LP)1/63 TM*

"நீ சொல்வதை என்னால் நம்ப முடியாது. அடுத்த வீட்டுக்குப் போயிருந்தால் ஒரு மணி நேரம் ஆகியிருக்குமா என்ன?"

"ஏதோ பேசிக்கொண்டிருந்துவிட்டேன்."

"இல்லை! நீ பொய் சொல்கிறாய்! அப்படியே போயிருந்தாலும் மணிக்கணக்காக அங்கே உனக்கென்ன வேலை? எத்தனை முறை நான் உன்னைப் போனில் கூப்பிடுவது?"

"போனில் நீங்கள் எதற்காக என்னைக் கூப்பிட வேண்டும்? அப்படி என்ன அவசரமான வேலை கெட்டுப் போகிறது?"

"என்ன! என்ன சொன்னாய்?" என்று சீறினான் சிங்காரம். அதற்குப் பிறகு அவன் பேசிய பேச்சுக்களைக் கோகிலாவால் காது கொடுத்துக் கேட்க முடியவில்லை. அவளை ஏசினான். தன்னை அவள் ஏமாற்றுவதாய்க் குற்றம் சாட்டினான். கட்டிய மனைவி அழகானவளாக இருந்தால் அவளே கணவனுக்குப் பகை என்ற பழைய பல்லவியைப் பாடினான்.

"இதோ பாருங்கள்! நீங்கள் என்மீது அளவுக்கு அதிகமாக அன்பாக இருப்பதாய் ஊர் உலகத்தை நம்பச் செய்தது போதும். உங்கள் ஆபீசில் உள்ளவர்கள், இங்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள், என்னைப் பெற்றவர்கள் இவ்வளவு பேரும் உங்கள் பிரியத்தைக் கண்டு பூரித்துப் போகிறார்கள். அது பொய்யாக வேண்டாம் என்றுதான் நானும் பொறுத்துப் பார்க்கிறேன். உங்கள் கால்களைப் பிடித்துக் கெஞ்சுகிறேன். என் பொறுமையைச் சோதனை செய்யாதீர்கள்."

"கல்யாணி!" என்று கத்தினான் சிங்காரம்; "நீ எங்கே போயிருந்தாய் என்பதைச் சொல்லி விடு!"

"நீங்கள் எனக்குப் புருஷனில்லை; எனக்குப் போலீஸ்காரர்!" என்று திருப்பிக் கத்தினாள் கல்யாணி. "தபால், தந்தி, போன், எப்போதும் நிழல் போல் என்னைப் பிரியாமல் இருப்பது இவ்வளவுமே வெளி வேஷம்! அன்பென்றால் அங்கே அணுவளவாவது நம்பிக்கை இருக்கும்."

"நீ எங்கே போனாய்? அதைச் சொல்!"

"பெண்டாட்டி அழகாயிருந்தால் அவளே பகை என்று எவனோ சொல்லியதை நம்பினால் எதற்காக அழகான பெண்ணைத் தேடினீர்கள்? நான் ஒரு தாய் ஆகி என் அழகு குலைந்தால் அப்போதாவது என்னை நம்புவீர்களா? அல்லது நான் குரூபி ஆகிவிட்டால் அப்போதாவது உங்களுக்கு என்மேல் நம்பிக்கை ஏற்படுமா?"

கோகிலா திடீரென்று உள்ளே நுழைந்தாள். "இந்தா கல்யாணி!" என்று நாடாவைக் கொடுத்துவிட்டு, "காலையில் உன்னைப் பிடித்து உட்கார வைத்துக் கொண்டதற்கு என்னை 'மன்னித்துவிடு'" என்று சொல்லிவிட்டுச் சரேலென்று வெளியில் வந்தாள்.

**வீ**ட்டுக்குத் திரும்பி வந்து நெடுநேரமாகியும் கோகிலாவின் உடல் நடுங்கிக்கொண்டே இருந்தது. தாமதமாக ஏழு மணிக்கு வரும் நடேசன் அன்று மேலும் தாமதமாக எட்டு மணிக்குத்தான் வந்து சேர்ந்தான். கோகிலாவின் மாற்றத்துக்குக் காரணம் அவனுக்கு விளங்கவில்லை.

"என்மீது கோபமா கோகிலா?"

அவள் அவன் முகத்தை உற்று நோக்கினாள்.

நடேசன் தன் துணிப் பைக்குள்ளிருந்து ஓர் அழகான பட்டுப் புடவையை வெளியில் எடுத்தான். கோகிலாவின் கண்கள் வியப்பால் மலர்ந்தன.

"நீ தாயாகும் செய்தியைக் கேட்ட அன்றைக்கே உனக்கு இப்படி ஒரு புடவை எடுக்க நினைத்தேன். வருகிற சம்பளத்தைக் கொண்டு இதை வாங்க முடியாது. அதற்காக ஒரு புது வேலையும் தேடிக் கொண்டேன். தினமும் நாலரை மணியிலிருந்து ஏழு மணி வரையில் ஓர் இடத்தில் கணக்கு எழுதுகிறேன். இன்றைக்குத்தான் சம்பளமும் கிடைத்தது.... கோகிலா! இந்தா, இதைக் கட்டிக்கொண்டு நாளைக்கு நீ என்னோடு வெளியில் புறப்பட வேண்டும்!"

இரண்டு கைகளாலும் அதை வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு அப்படியே சரிந்து அவன் கால்களைப் பற்றிக் கொண்டாள் கோகிலா. அவளால் தன் அழுகையை நிறுத்த முடியவில்லை. தேம்பித் தேம்பி, விம்மி விம்மி அழுதாள்.

நடேசனுக்குக் காரணம் விளங்கவில்லை. அப்படியே அவளை மெல்லப் பற்றித் தூக்கினான். அவள் முகத்தை உற்று நோக்கினான்.

"என்ன கோகிலா?"

அவளால் வாய் திறந்து எதுவுமே பேச முடியவில்லை. அவனுடைய எல்லையற்ற பொறுமை அவளால் அன்றுதான் பரிபூரணமாக உணர முடிந்தது. அவளுடைய கணவனின் கண்களாகிய பளிங்குக் கண்ணாடியில் அவளது உள்ளமாகிய பொன் தகட்டில் அவளுடைய பிரதிபிம்பம் சுடர் இணையற்ற பேரெழிலுடன் ஒளி செய்வதைக் கண்டு அவள் மெய்மறந்தாள்.

# பின்னியின் லஸ்டலின் ஷர்ட்டிங் மீண்டும் வந்துள்ளது!

பின்னியின் லஸ்டலின்—உயர்தர பாப்லின் வகைகளில் புகழ்பெற்றது உன்னதத்தரம், மென்மையான நெசவு, அதற்கே உரித்தான நீடித்த உழைப்பு, ஆகிய அம்சங்களுடன் இப்போது மீண்டும் கிடைக்கிறது. இறக்குமதியான உயர்ரக பருத்தியால் தயாரானது. 'ஸான்பரைஸ்ட்' செய்தது. பளிச்சென எடுத்துக்காட்டும் ஷர்ட், பள்ளிக்கூட யூனிபாரம், பிளவுஸ் போன்றவைக்கு ஒப்பற்றது. நீடித்து உழைப்பது.



உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கு வாங்குங்கள்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட், பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ், ஸ்தாபனத்தின் ஒரு கிளை



2-7-66ம் தேதி நடைபெற்ற மதுரை அலுமினியம் கம்பெனியின் திறப்பு விழாவின்போது வேலைத்திறனைப் பாராட்டி ராஷ்ட்ரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் கோயம்புத்தூர் "எவரெஸ்ட் இன்ஜினியரிங் ஒர்க்ஸ்" உரிமையாளர் திரு ஏ. சோமசுந்தரம் அவர்களுக்கு நினைவுக்கேடயம் வழங்கியபோது எடுத்த படம்.

தென் இந்தியாவிலேயே மிகப்பெரிய தொழில் திட்டமான மதுரை அலுமினியம் கம்பெனி லிமிடெட் உருவானதற்குக் காரணமாக விளங்கியவர் அதன் மேனேஜிங் ஏஜெண்ட் திரு வெங்கடசாமி நாயுடு அவர்களாவார்.

இந்த பிரம்மாண்டமான தொழிற்சாலையின் எல்லா கட்டிடங்களுக்கும் வேண்டிய 2000 டன்களுக்குமேல் எஃகு நிர்மாண வேலைகள் (Structural Steel Fabrication & Erection) எஃகு கதவுகள் மற்றும் ஜன்னல்கள், பெரிய எஃகு டேங்குகள் மற்றும் பைப் லைன்கள், மெஷினரி எரக்ஷன் (Machinery Erection) ஆகிய பல வேலைகளையும் மிகுந்த வேலைத் திறனுடன் கோயம்புத்தூரைச் சேர்ந்த எவரெஸ்ட் இன்ஜினியரிங் ஸ்தாபனத்தார் செய்து முடித்துள்ளார்கள்.

தவிர மேற்படி 'எவரெஸ்ட் இன்ஜினியரிங் ஒர்க்ஸ் ஸ்தாபனத்தார் திருச்சியில் இந்திய அரசாங்கத்தின் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட், ஸ்தாபனத்தார் நிர்மாணித்துவரும் பாய்லர் தொழிற்சாலையிலும் பெரும் பங்கு கொண்டிருக்கின்றனர்.

மேற்படி பாய்லர் தொழிற்சாலையின் ஒரு பகுதி கட்டிடங்களுக்கான 3,500 டன்கள் எஃகு நிர்மாண வேலைகளில், பெரும் பகுதியை முடித்துள்ளனர்.

மற்றும் நாட்டின் தொழில் திட்டங்களில் பங்கு கொண்டு திறமையாக வேலை செய்து நாட்டின் தொழில் முன்னேற்றத்திற்காக பாடுபடுவது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.



# அதிகாரி வந்தார்!

— துமிலன் —

"சூரியனது கிரணங்களில் அல்ட்ரா வயலட் கிரணம் என்று இருக்கிறதே. அது உடம்புக்கு நல்லதல்லவா?" என்று மாதங்கி விசாரித்தாள்.

"ஆமாம், இருக்கிறது. இப்போது விஞ்ஞானத்துக்கு எங்கே பாய்ந்தீர்கள்?" என்று வசந்தன் கேட்டான்.

"இங்கே பஸ் ஸ்டாப்பில் படை படைக்கிற வெய்யிலில் நின்று கொண்டிருக்கிறோம். ஷெல்டர் கிடையாது. பஸ் ஸ்டாப் கம்பத்தின் நிழலில் நிற்கலாமென்றால், நிழல் நடுத் தெருவில் போய் விழுந்து கொண்டிருக்கிறது. ஆகையால் நாம் இப்போது சூரிய ஸ்நானம் செய்து கொண்டிருக்கிறோம். அல்ட்ரா வயலெட் கிரணங்களின் பலனை யெல்லாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்."

"உஸ்! இரைந்து பேசாதீர்கள்!" என்று வசந்தன் எச்சரித்தான்.

"ஏன்? பேச்சுச் சத்தத்தினால் கிரணங்கள் பாதிக்கப்படுமா?" என்று மாதங்கி கேட்டாள்.

"இல்லை. யாராவது அரசாங்க அதிகாரி காதில் விழுந்து விட்டால் ஆபத்து! இப்போது கார்ப்பரேஷன், ராஜ்ய சர்க்கார், இந்திய சர்க்கார் யாருக்கும் நாம் அந்தக் கிரணங்களை இலவசமாக அனுபவித்து வருவது தெரிந்தால் அதற்கு வரி போட்டு, பஸ் டிக்கெட்டுடன் சேர்த்து வசூல் செய்ய முயற்சி செய்யலாம்!" என்று வசந்தன் கூறினான்.

அவர்கள் இருவரும் ஒரு பஸ் ஸ்டாப்பில் நின்று பேசிக் கொண்டிருந்தனர். அப்போது கால் பர்லாங் தூரத்துக்கப்பால் ஒரு பஸ் வரும் சத்தம் கேட்டது. அத்துடன் பஸ் பிரயாணிகளைக் கதிகலங்கச் செய்யும் கண்டக்டரின் அந்தப் புகழ்பெற்ற இரட்டை 'விஸில்' சத்தமும் கேட்டது. அடுத்த விநாடி ஒரு பஸ் பிரயாணிகள் நிற்குமிடத்தைக் கடந்து ஒரு நெருப்பணைக்கும் இயந்திரத்தைப்போல் மிக வேகமாய்ச் சென்றது. கண்டக்டர் புன்னகை புரிந்த வண்ணம் கையை ஆட்டியதைப் பார்த்தால் 'டாட்டா' சொல்வது போல் இருந்தது.

திடீரென்று வானத்தில் கரு மேகம் சூழ்ந்தது. கடற்காற்று இலேசாக அடிக்க ஆரம்பித்தது.

"நாம் வெயிலில் நிற்பது மேகங்களுக்குச் சகிக்கவில்லை. அவை சூரியனை மறைத்துக் கொண்டுவிட்டன. பார்த்தீர்களா?" என்றான் வசந்தன்.

"ஆமாம்! தவிர வெயிலில் நின்றுகொண்டு கதையைச் சொல்லிக் கொண்டிருக்க முடியாதல்லவா? அதற்காக ஜில்லென்று காற்றுக்கூட அடிக்கிறது" என்று மாதங்கி கூறிவிட்டு, 'மரியாதையுள்ள கண்டக்டர்' கதையை ஆரம்பித்தாள்.

ஒரு நாள் ஒரு பஸ் ஸ்டாப்பில் பத்துப் பன்னிரண்டு பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அத்தனை பேரும் ஸ்திரீகள். அப்போது நவராத்திரி சமயம். அவர்கள் பலர் தங்கள் தங்கள் சிநேகிதிகள், உறவினர்கள் வீட்டுக்குப் பொம்மைகள் பார்ப்பதற்குப் போவதற்காக நின்று கொண்டிருந்தார்கள். அதுதான் கொலுப் பார்க்க!

சாதாரணமாக இத்தகைய கூட்டத்தைக் கண்டால் சில கண்டக்டர்கள் வேண்டுமென்றே பஸ்ஸை நிறுத்துவார்கள். நூறு பேர்கள் இருந்தாலும் வண்டியில் ஏற்றித் திணித்துக் கொண்டு செல்வார்கள். சிலர் இந்தக் கூட்டத்தைத் தூரத்தில் வரும்போதே கவனித்துவிட்டு வண்டி நிற்காமல் ஓட்டச் செய்வார்கள்.

ஒரு பஸ் வேகமாக வந்தது. அது 'ஸ்டாப்'பில் நிற்கவில்லை. சற்று அப்பால் போய் நின்று ஒரு கிழவரை இறக்கியது. அந்தக் கிழவர் தட்டுத் தடுமாறிக் கொண்டு இறங்குவதற்குள் ஸ்திரீகள் கூட்டத்தில் நின்றிருந்த ஒரு பெண் மிக வேகமாக ஓடினாள்.

"வண்டியில் நிறைய இடம் இருக்கிறதே? ஏன் நிற்காமல் ஓட்டுகிறாய்?" என்று கண்டக்டரைக் கோபித்தாள்.

பிறகு ஸ்டாப் பக்கம் திரும்பி அங்கிருந்தவர்களையெல்லாம் வரச் சொல்லிக் கையை நீட்டிச் சைகை காண்பித்தாள். மறுகணம் எல்லா ஸ்திரீகளும் வேங்கையினம் பாய்வது போலும், சிங்க இனம் தாவுவது போலும் என்று ஒரு கவி யாரோ வர்ணித்திருக்கிறாரே அது மாதிரி பாய்ந்து ஓடினார்கள். அந்தப் பெண் எல்லோரையும் ஏறச் செய்து விட்டுக் கடைசியில் தானும் ஏறிக்கொண்டாள். பஸ் புறப்பட்டது.

அந்தப் பெண்ணுக்குச் சுமார் இருபத்திரண்டு, இருபத்து மூன்று வயதிருக்கும். பார்ப்பதற்குப் புருபுருவென்றிருந்தாள். இடுப்பில் ஒரு நைலக்ஸ் புடவை கட்டியிருந்தாள். இடது கையில் ஒரு கைக் கடிகாரம் கட்டியிருந்தாள்.



வலது கையில் நவீனக் கண்ணாடி வளைகள் மட்டுமிருந்தன. கறுப்பு மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தாள். கையில் ஒரு சிறிய தோல்பை இருந்தது.

"வண்டியில் எத்தனை இடமிருக்கு? வண்டியை அடிச்சுக்கொண்டு போறீங்களே?" என்று கண்டக்டரைப் பார்த்துக் கூறினாள். கண்டக்டர் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, அப்பால் சென்று டிக்கட் கொடுக்க ஆரம்பித்தான். ஒரு வயோதிக அம்மாள் "மயிலாப்பூர் குளத்தங்கரைக்கு" என்று சொன்னாள்.

"அட கடவுளே! இது அடையாறல்லவா போகிறது? பார்த்து ஏறித் தொலைத்திருக்கக் கூடாதா?" என்று கண்டக்டர் தமது பாணியில் கேட்டார்.

"மரியாதையாய்ப் பேசுங்க! நீங்கதான் எங்கேயோ கொள்ளை போனதுபோல் ஓட்டிக் கொண்டு போறீங்களே! போகிற வேகத்திலே போர்டிலே என்ன இருக்கிறதென்று தெரியிறதில்லை. இதில் 23-ஏ, 23-பி, 23-ஸி, என்றெல்லாம் வேறு. அந்த ஏ. பி. ஸி. டியை இடுக்கிலே ஒளிச்சு வைச்சு விடுகிறீங்க!" என்று அந்த மூக்குக் கண்ணாடிப் பெண் உரக்கக் கூறினாள்.

கண்டக்டர் டிக்கெட் கொடுப்பதை நிறுத்திவிட்டு, அந்தப் பெண் நின்றிருந்த பக்கம் திரும்பிப் பார்த்தார். ஆனால் நடுவில் ஸ்திரீகளின் கூட்டம் இருந்ததால் அவள் அவர் கண்ணுக்குப் படவில்லை.

பஸ்ஸிலிருந்த பிரயாணிகள் எல்லோரும் மூக்கின்மேல் விரலை வைத்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஓர் அரசாங்க பஸ்ஸுக்கு அதன் கண்டக்டர் சர்வ வல்லமை உள்ள தெய்வமாச்சே! அவரை இப்படி ஒரு பிரயாணி அலட்சியமாய்ப் பேசியதைக் கேட்டு அவர்கள் திகைத்துப் போயிருந்தனர்.

"டைம் ஷீட் தகடு வைக்கிறதுக்கு ஓர் ஆசனம்!" என்று அந்த மூக்குக் கண்ணாடிப் பெண் கூறிக்கொண்டே கண்டக்டருக்கென்று பிரத்தியேகமாக விடப்பட்டுள்ள சிம்மாசனத்திலிருந்து அந்தத் தகட்டை எடுத்துப் பக்கத்து இடுக்கில் வைத்தாள். பிறகு பக்கத்தில் நின்றிருந்தவரிடம் "பாட்டி அம்மா, நீங்கள் இதில் உட்கார்ந்து கொள்ளுங்கள்!" என்று கூறி அதில் அவளை உட்கார வைத்தாள்.

வண்டி போய்க் கொண்டிருந்தது. தான் அடுத்த ஸ்டாப்பில் இறங்க வேண்டுமென்று ஓர் அம்மாள் சொன்னாள். டிரைவர் பஸ் ஸ்டாப்பினிடம் போய்த் திடீரென்று பிரேக் போட்டார். அந்த அம்மாள் ஒரு காலைக் கீழே வைத்துக் கொண்டிருந்தாள். அதே சமயத்தில் முன் பக்கமாக இறங்கிய ஒரு பிரயாணி வண்டிக்குள் ஏறுவதற்கு ஒரு காலைத் தூக்கிப் படியில் வைத்துக் கொண்டிருந்தார். மறு கணம் கண்டக்டர் ஊதப் போனார். மொத்தத்தில் இரண்டு கால்கள் படியில் இருக்கின்றன என்பது அவர் கணக்கு. அவர் ஊதப்போகும்போதே டிரைவர் வண்டியைத் திடீரென்று ஓடச் செய்தார்.

"என்ன இப்படி ஆள் ஏறும்போதே வண்டியை விடுகிறீர்கள்?" என்று அந்தப் பெண் மிகவும் கோபமாகக் கேட்டாள்.

"யாரது அந்தப் பெண்?" என்று டிரைவர் திரும்பிப் பார்த்துக் கண்டக்டரை விசாரித்தார். கண்டக்டர், "பேசாதே!" என்று தம் தலையை ஆட்டி விரல்களை உதடுகளின் மீது வைத்துச் சைகை செய்தார்.

அதைக் கவனித்த பிரயாணிகள் ஒருவரையொருவர் பார்த்துத் தலையாட்டிக்கொண்டார்கள். பஸ் கண்டக்டர்கள் பிரயாணிகளிடம் மரியாதையாய் நடந்து கொள்வதில்லை, அவர்களைச் சரியாக வண்டியில் ஏற்றி இறக்குவதில்லை என்று பொதுஜனங்கள் புகார் செய்து கொண்டே இருக்கிறார்கள் அல்லவா? அதற்காகச் சர்க்கார் ஒரு பிரத்தியேக இன்ஸ்பெக்டரை நியமித்திருக்கிறார்கள் என்று அவர்கள் நினைத்தார்கள்.

ஒரு கல்லூரி மாணவி, "இவள் எங்க அக்காவோடு படிச்சவள் மாதிரி இருக்கு. அப்புறம் ஐ. ஏ. எஸ். பரீட்சைக்குப் போனாள்" என்று தன் பக்கத்திலிருந்த பெண்ணிடம் இரகசியமாகச் சொன்னாள்.

"அவளாகத்தானிருக்கும். திடீர்ப் பரிசோதனை செய்வதற்காகப் பெரிய உத்தியோ

# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்லரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று!

**சுத்தமாக்க**
-உங்கள் பற்களிலிருந்து அந்த மங்கிய மஞ்சள் திரையைப் போக்குகிறது

**வெண்மையாக்க**
-அவைகளுக்கு அந்த அதிகமான வெண்மையைத் தருகிறது

**காக்க**
-சொத்தைக்குக் காரணமான கிருமிகளை நீக்கி உங்கள் வாயைப் புத்துணர்ச்சியுடன் சுத்தமாக வைக்கிறது.






**மக்ளீன்ஸ் – அதிவெண்மையான பற்களுக்கு**

கண்டக்டராகவே அனுப்பியிருப்பார்கள்'' என்றான் அந்தப் பெண்.

''இருக்கும், இருக்கும். அதிகாரியாயில்லாமல் வேறு யாராவது இப்படிக் கண்டக்டரிடம் பேசியிருந்தால் அவனைக் கீழே இறக்கிவிட்டிருப்பார்—அல்லது போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓட்டச் சொல்லியிருப்பார்!'' என்று ஒரு ஸ்திரீ கூறினாள்.

* * *

**வ**ண்டி போய்க் கொண்டேயிருந்தது.

டிரைவர் பஸ்ஸை நிதானமாகவே ஓட்டிச் சென்றார். கண்டக்டர் யாராவது பிரயாணிகள் ஏறி இறங்குகிறார்களா என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகப் பார்த்துவிட்டு அப்புறமே ஊத முயன்றார். கண்டக்டர் ஒரு பிரயாணியிடம் அளவுக்கு மீறிய மரியாதை காட்டிப் பேசினார்.

''தாங்கள் தயவுசெய்து டிக்கெட் வாங்கிக் கொள்கிறீர்களா? அடியேனிடம் சில்லறை இல்லையாகையால், நோட்டோ, செக்கோ கொடுக்காதீர்கள். அன்புகூர்ந்து சரியான சில்லறையைக் கொடுங்கள்!'' என்று பணிவுடன் கேட்டுக் கொண்டார்.

இது காதில் விழுந்தபோது கறுப்பு மூக்குக் கண்ணாடிப் பெண்ணின் முகத்தில் கோபம் தோன்றியது. ஆனால் உடனேயே அவள் தன்னை மீறிச் சிரித்துவிட்டாள்.

அவள் பஸ்ஸை நிறுத்துவதற்கான மணியை அடித்தாள். அப்போது, பஸ் கண்டக்டர் அவள் சமீபம் வந்து பயபக்தியுடன் நின்றான். ''என்னிடம் டிக்கெட் வாங்கிக்கொள்ளவில்லையே!'' என்று கூறித் தன் கையில் வைத்திருந்த காசைக் கொடுத்தான்.

''இது மாதிரி டிக்கட் வாங்காதிருக்கிறது, டிக்கெட் கொடுத்துவிட்டுக் காசு வாங்காதிருந்துவிடுகிறது, அப்புறம் கையை விட்டுக் கொடுக்கிறது'' என்று அவள் கடிந்தாள்.

அவள் தான் அணிந்திருந்த கறுப்பு மூக்குக் கண்ணாடியைக் கழற்றினாள். அழகான அவள் கண்களில் அன்பும் அமைதியும் நிரம்பியிருந்தன.

அவள் கீழே இறங்கினாள். கண்டக்டரும் படியில் போய் நின்றான். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஒரே ஒரு கணம்தான்.

கண்டக்டர் ஊதுகுழலை வாயில் வைக்கப் போனார். அப்போது அந்தப் பெண் ''வண்டி ஓடுகிறபோது இப்படிப் படியில் நிற்காதே. அதை நினைத்துப் பார்க்கிறபோது எனக்குத் திக்கு, திக்கு என்கிறது. டியூட்டி முடிந்ததும் நேரே வீட்டுக்கு வந்துவிடு. பீச்சுக்குப் போகலாம்!'' என்றாள்.

''சரிதான் கண்ணு!'' என்று கண்டக்டர் பதில் கூறினார்.

அந்தப் பெண், கண்டக்டரின் உண்மையான மேலதிகாரிதான். அவர் வீட்டின் அதிகாரி ஆயிற்றே அவள்.

* * *

**மா**தங்கி கதையை முடித்த சமயம் நடைபாதையோடு நாலைந்து எருமை மாடுகள் வரவே, அவளும் வசந்தனும் சற்று நகர்ந்து அதற்கு வழி விட்டார்கள். ஆனால் இரண்டு மூன்று மாடுகள் வசந்தன் மீது இடித்துக் கொண்டே போயின.

''அதற்குத்தான் எருமை மாடு போல இடித்துக் கொண்டு போகிறது!' என்று சொல்லுகிறார்கள் போலிருக்கிறது'' என்றாள் மாதங்கி.

அந்த எருமைகளையே கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்த வசந்தன் ''ஆமாம்! ஆமாம்!'' என்று தலையை ஆட்டினான். ''ஆனால் அவற்றைப் பற்றி அலட்சியமாகப் பேசக் கூடாது. பால் கொடுக்கும் எருமை மாட்டை எருமை மாடு என்று மரியாதைக் குறைவாகச் சொல்லக் கூடாது. 'மகிஷேசுவரி' என்று சொல்ல வேண்டும். ஒரே ஒரு ஊரில் தர்மராஜன் என்று ஒருவர் இருந்தார். அவர் வளர்த்த எருமை மாட்டுக்கு மகிஷேசுவரி என்று பெயர் வைத்திருந்தார்'' என்று வசந்தன் சொல்லிக்கொண்டிருக்கும் போதே ஒரு பஸ் புதியாய் வந்து நின்றது. மாதங்கி அதில் ஏறிச் சென்று விட்டாள்.



பிரசங்கி: வியாபாரத்தில் ஈடுபட விரும்புகிறவர்களுக்கு மூலதனம் மட்டும் நிறைய இருந்து விட்டால் போதாது. அதை விட முக்கியமாகத் தேவைப்படுபவை இரண்டே இரண்டு குணங்கள். அவை நாணயமும் புத்திசாலித்தனமும் தான். பிறருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பது நாணயம். யாருக்கும், எதற்கும் வாக்குக் கொடாமல் இருப்பது புத்திசாலித்தனம்!






"இருப்பா....முதலாளியைக் கேட்டுச் சொல்றேன்..... முதலாளி! டியூப் லைட்டை எங்கே போடறது?"

"என் தலையிலே போடறது! அதைக் கூடவா என்னிடம் கேட்க வேண்டும்?"

## அமெரிக்க அநுபவம்!

ஸ்வாமி ஸத்யதேவ் பரிவ்ராஜக் என்ற பாரத நாட்டுச் சன்னியாசி அமெரிக்காவில் சிகாகோ நகரில் தங்கியிருந்தார். ஒரு நாள் காலையில் உலாவப் போனார் சன்னியாசி. அப்பொழுது ஏழு வயதுப் பையன் அவரிடம் வந்து, "ஐயா, என்னிடம் ஒரு பத்திரிகை வாங்கிக் கொள்ளுங்கள்" என்றான். அவன் கையில் ஒரு கட்டுச் செய்தித் தாள்கள் இருந்தன.

"எனக்குத் தேவையில்லை" என்றார் சாமியார்.

"தயவு செய்து ஏதாவதொரு பத்திரிகை வாங்கிக் கொள்ளுங்கள்" என்று வேண்டிக் கொண்டான் சிறுவன்.

"பாவம்! உன் அப்பா மிகவும் ஏழை போல் இருக்கிறது. இல்லாவிட்டால் நீ இந்த வயதிலேயே இப்படிப் பிழைப்புக்குத் தெருத் தெருவாக அலைய வேண்டியிருக்குமா?" என்றார் சாமியார் மிகுந்த அநுதாபத்துடன்.

பையன் அவரை முறைத்துப் பார்த்தான். பிறகு ஏளனமாகச் சிரித்தான்.

"நீங்கள் இந்த அமெரிக்காவுக்கே புதிசு போலிருக்கிறது. என் தகப்பனார் ஒரு கோடீசுவரர். ஆனால், அவருடைய பணத்தையே என் கைச் செலவுகளுக்கெல்லாம் நம்பிக் கொண்டிருக்க முடியுமா?" என்று கேட்டான்.

சாமியார் பதில் பேசாமல் ஒரு பத்திரிகையைக் காசு கொடுத்து வாங்கிக் கொண்டார்!



இப்பொழுது
நடைபெறுகிறது

சென்னை
மிட்லண்ட (ஏர்கண்டிஷன்)
ஸ்ரீகிருஷ்ணா,
மேகலா

புரட்சிநடிகர்
எம்.ஜி.ஆர்
நடிக்கும்



பத்மினி
பிக்சர்ஸ்

# ஆயிரத்தில் ஒருவன்

ஈஸ்ட்மென் கலர்
ஜெமினி லேபரட்டரி

தயாரிப்பு & டைரக்ஷன்: பி.ஆர்.பந்துலு

வசனம்:ஆர்.கே.சண்முகம் • பாடல்கள்:கண்ணதாசன் & வாலி.....
இசை:விஸ்வநாதன்-ராமமூர்த்தி • ஒளிப்பதிவு:வி.ராமமூர்த்தி
கலை:ஏ.கே.சேகர் • பாடல்கள் ஒலிப்பதிவு-ரீரிகார்டிங்:டி.எஸ்.ரங்கசாமி
ஸ்டுடியோ:விஜயா

ARUNA

# பப்படப் பிச்சை

டி.வி.பாரதியன்



சிரிப்பொலி கேட்டு நிமிர்ந்து பார்த்தேன். மல்லி நின்றுகொண்டிருந்தாள். ஒரு நிமிடம் நன்றாக அவளைக் கூர்ந்து நோக்கினேன். என்னுள் ஒடிய சோகக் குரல் ஒலியை என்னவென்று விவரிப்பேன்?

நாகரிக மங்கையாக மல்லிகா நின்றால் எப்படி விருப்பாள் என்று ஒரு சிந்தனையும் தொடர்ந்தது. வறுமை காரணமாக மூன்று வருடங்களுக்கு முன்புறம் இருந்த ஒரு மோஸ்தரில் முழுக்கை அரை சோளியும் காந்தி மார்க்கெட்டில் வாங்கிய பத்து ரூபாய் நைலான் புடவையும் அணிந்தே அவள் இத்தனை கவர்ச்சியுடன் தோன்றினால், நல்ல உடையும் பலவிதப் பூக்களும் இருந்தால் அழகுத் தெய்வமாகவே விளங்குவாள்!

"போய்விட்டு வரவாமா மாமா?"

என் நினைவு என்னுள் திரும்பியது.

"மல்லி குழந்தை. அவளுக்கு அதிகமாக ஒண்ணும் தெரியாது. உங்க சிநேகிதர்கிட்டே சொல்லி ஜாக்கிரதையாகக் கவனிக்கச் சொல்லுங்கோ!" என்றாள் என் மனைவி லட்சுமி. அவள் குரல் கொஞ்சம் கம்மித்தான் இருந்தது. திருமணமாகிக் கணவன் வீட்டில் போய் இன்பமாக இருக்க வேண்டிய வயதில் குடும்பத்தைக் காப்பாற்ற வேலை தேடி அலைய வேண்டிய தலைவிதி ஒரு பெண்ணுக்கு—குழந்தை முதல் அருகிலேயே வளர்ந்த எழில் மனருக்கு — ஏற்பட்டுவிட்டால் அன்பு அழத்தானே அழும்?

ஏழு குழந்தைகளை விட்டு மறைந்துபோன சிதம்பரம் தம் மனைவிக்கும் தம் வாரிசுகளுக்கும் ஒன்றுமே விட்டு வைக்கவில்லை. — கஷ்டத்தைத் தவிர. தாம்



இருந்தவரை அவர்களுக்காக உழைத்த உத்தம உயிர்தான் அது. குஜராத்திக் கம்பெனியில் ஒன்பது மணி நேரம் உழைத்துக் கிடைத்த ஊதியம் மீதம் வைக்க எங்கே இருந்தது? என்றாவது இந்த நிலை வரக்கூடாதே என்றுதான் அவர் பயந்தார். நடக்கக்கூடாதது நடந்தது. பத்தே நிமிடங்களில் பொட்டென்று பூவும் பிஞ்சுமாய் விட்டு விட்டு மரம் சாய்ந்துவிட்டது. முழுக்க மூன்று மாதங்கள் ஆகவில்லை. இன்று முதற் பூ மல்லிகை வெளியே கிளம்பி யிருக்கிறாள். போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தத் தெம்பு அவளுள் பிறந்திருப்பது எனக்கு அதிசயமாகப் படவில்லை. இது எப்படி இத்தனை அழகையும் வாரிச் சூட்டிக் கொண்டு தனியே வேலைக்குப் போய் வந்து நாளைத் தள்ளப் போகிறது என்றுதான் எண்ணி எண்ணி வியந்தேன்.

மல்லியை அழைத்துக் கொண்டு என் நண்பனது ஆபீசுக்குப் போய்ச் சேர்ந்தேன். நண்பன் என்று நான் சொல்லிக் கொள்வது மற்றவர்களுக்கு அவ்வளவு சரியாகப் படாது. ஏனெனில் இன்று பிச்சை ஏறிவிட்ட உயர் நிலைக்கும், சர்க்கார் உத்தியோகத்தின் நிரந்தரத்தில் பேரின்பம் பூண்டு, போதும், போதாது என்று இருந்த சம்பளத்துடன் போராடி நாட்களை விழுங்கிய எனக்கும் பணவசதியைப் பொறுத்த வரையில் இணைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு வித்தியாசம் இருந்தது. நான் பிச்சையைச் சென்ற நான்கு ஆண்டுகளில் இரண்டு முறைதான் ஓரிரு நிமிடங்களுக்குத் தற்செயலாகச் சந்தித்துப் பேசியிருக்கிறேன். அவன் பழைய பிச்சையாக மாறுதல் ஏதும் ஏற்படாதவனாக எனக்குத் தோன்றியதால் தான் இன்று துணிந்து மல்லிக்கு உத்தியோகம் கேட்க அவனிடம் வந்து நின்றேன்.



'பி. பிச்சை' என்று பெயர் எழுதியிருந்த அறைக் கதவைப் பார்த்தேன். வெளியே நின்ற வேலையாள் என் பெயரையும் பேட்டியின் காரணத்தையும் சிறு தாளில் எழுதி வாங்கிக் கொண்டு உள்ளே சென்றான். மீண்டும் அவன் வெளிப்பட்ட போது, அந்தக் குறிப்புத் தாளிலேயே 'தனிப்பட்ட ஜோலி' என நான் குறித்த எழுத்துக்களுக்குக் கீழே 'தயவு செய்து சற்றுக் காத்திருக்கவும்' என்று எழுதி அனுப்பியிருந்தான் பிச்சை. காத்திருக்கப்போட்டுக்கிடந்த சோபாவின் ஒருமுனையில் மல்லியும் மறு முனையில் நானுமாக உட்கார்ந்திருந்தோம்.

பிச்சையை நான் பார்க்கச் சென்று அவன் என்னைக் காத்திருக்கச் செய்தது எனக்கு மனசுக்குச் சிறிது வருத்தம் தருவதாகவே இருந்தது. இதே பம்பாய் நகரத்துக்கு இந்தப் பப்படப் பிச்சை பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் வந்தபோது தாதர் ரயிலடியில் இவனை வரவேற்று இரண்டுமாத காலம் தண்டச் சோறு போட்டு இந்த ஊரிலேயே காலூன்ற வழி செய்து கொடுத்தவன் நான் என்பதை அவன் உள்ளம் மறந்து விட்டதா?

செத்துப் பழங்கதையாகி விட்ட சென்று மறைந்த நாட்களுக்கு உயிர் தெளித்து எழுப்பிப் பார்த்தது என் நினைவு. பிச்சை இந்த ஊரில் வந்து இறங்கிய மறுநாளே எங்கோ பேட்டிக்குப் போய் விட்டு மாலையில் திரும்பி வருகையில் தன் கையிலிருந்த எஸ். எஸ். எல். ஸி., டைப்ரைட்டிங் முதலிய பரீட்சைகளில் தேர்வு பெற்றதைக் குறிக்கும்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அனறலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

சர்டிபிகேட்டுகளை பின்வண்டியில் மறந்து வைத்துவிட்டு இறங்கி வந்து விட்டான். அவன் நிலையில் நான் இருந்திருந்தால் நெருப்பில் விழுந்தவனைப்போல் துடிதுடித்து அலறியிருப்பேன். அவன் சிரித்துக் கொண்டே சொன்னான் செய்தியை. அவை இல்லாமலே பிழைக்க வழி தேட வேண்டும். என்று அவன் சொன்னபோது எனக்கு அவன் பேச்சு பைத்தியக்காரத்தனமாகப் பட்டது.

இரண்டு மாதங்கள் முடிவதற்கு முன்னும் அவன் சொன்னபடி செய்து காண்பித்து விட்டான். மாதுங்கா ரயிலடிக்கு எதிரே காய் கறிக் கடைகள் அருகே ஒரு புதுக் குரல் கேட்டது. "பப்படம்... பப்படம்! பத்தணாவுக்கு நூறு... பப்படம்... பப்படம்! அணாவுக்குப் பத்து பப்படம், அற்புதமான பப்படம்!...."

நான் மலைத்தேன். அவன் துணிச்சலைக் கண்டு. "டே பிச்சை, உன்னைப் படிக்க வைத்து இப்படி நடு ரோட்டிலே கத்தி விக்க வாடா உன்னைப் பெத்தவள் அனுப்பி வைத்தாள்? இது என்ன வேலைடா?" என்று நான் குமுறினேன்.

பாவிப் பயலுக்கு எங்கிருந்துதான் அந்தலை நெஞ்சுரம் வந்ததோ? "வெங்கிட்டு! வியாபார நேரத்திலே எதையாவது கேட்காதே! எதிர்த்த வரிசையிலே பத்துக்கடை தள்ளி ஒரு கடை இருக்கே அதிலே கல்லாவிலே உட்கார்ந்திருக்கிற ஆசாமி எட்டு வருஷங்களுக்கு முன்னாலே தெருவிலே முறுக்கு வடை வித்தவன். இன்னைக்குக் காரிலே போறான்! மண்ணைக்கூடக் காசாக்கலாம் வெங்கிட்டு இந்த ஊரிலே! நான் செய்யற வேலையிலே அநாயம் ஒண்ணும் இல்லே!"

அவன் சொன்னது உண்மை என்று மனசு ஒப்புக்கொண்டாலும் சட்டை மடிப்பு அழுங்காமல் உட்கார்ந்து பேனாவால் உழைப்பழகிவிட்ட என் நெஞ்சுக்கு அது ஏற்கவில்லை. பணம் வருகிறது என்பதற்காக மரியாதையை விட முடியுமா? பப்படப் பிச்சையைப் பற்றி எனக்குத் தெரிந்தவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது எனக்கு வருத்தமாகத்தான் இருந்தது.

வெகு சீக்கிரத்திலேயே மாதுங்கா ரயிலடிக்கு வெளியே பப்படம் விற்கும் குரல்கள் பலப் பலவாய்ப் போட்டியிட்டன. அந்தப் போட்டியிலே ஒரு நாள் பப்படப் பிச்சையின் குரல் கேட்கவில்லை. 'எங்கு போய்த் தொலைந்தான்?' என எண்ணியவாறும் விற்பனை வரிசையைக் கவனித்துக்கொண்டே நடந்தேன். ஒரு மூலையில் ஏகப்பட்ட கைத்தறி வேட்டி துண்டு ஆகியவற்றை அடுக்கி வைத்துக் கொண்டு பிச்சை நின்றுகொண்டிருந்தான். முகத்திலே பிரகாசம் கூடியிருந்தது. அவன் உடம்பு ஒரு சுற்றுப் பருத்திருந்தான்.

"என்னப்பா சௌக்கியமா? நானே உன்னைப் பார்க்க வரணும் என்று நினைத்திருந்தேன். பப்படத்தை விற்று வேட்டி துண்டு வாங்கியிருக்கேன். பார்க்கலாம் இது எதுலே கொண்டுபோய் விடுதுன்னு!"

"நல்லது!" என நான் நடந்துவிட்டேன்.

அதற்கு அப்புறம் வெகு நாட்கள் அவன் தெருவில் நிற்கவில்லை. எவனோ குஜராத்தியைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டு வெளிநாட்டுக்குக் கைத்தறி ஏற்றுமதியின் பெருங்காலாக வியாபார நடை போட்டான்; தொழில் பெருகிற்று. பப்படப் பிச்சையின் துணிவும் சுறுசுறுப்பும் பணமாய்க் கொழித்தன. தனிக் கம்பெனி வைத்துச் சொந்த வியாபாரம் தொடங்கி விட்டான். இன்று அவன் பல லட்சங்களுக்கு அதிபதி. நினைத்தபோது எங்கெங்கோ விமானத்தில் போய் வருகிறான்.



"அம்மப்பா! லேடியின் டைப் மெஷின் உருகிப் போய் விடும் போலிருக்கு சார்! என் சீட்டுக்கு எதிரே ஒரு ஏர் கூலர் வைக்க ஏற்பாடு செய்யுங்கள்."

"சார்! உங்களை வரச் சொல்றார் ஐயா!"

காத்திருக்க நேர்ந்ததில் சற்றே மனம் வருந்திப் பழைய நாளைப் பிச்சையை எண்ணி அசை போட்ட நினைவுக் காட்சிகளை விழுங்கிவிட்டு எழுந்திருந்தேன். "வாம்மா, மல்லி!" என்று அவளை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றேன்.

என்னைக் கண்டதும் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்துக் கொண்டே மல்லிகாவை நோக்கினான்.

"அவசரமாக ஒரு கடிதாச டிக்டேட் பண்ணிக் கொண்டிருந்தேன். அதனாலேதான் கொஞ்ச நேரம் உன்னைக் காத்திருக்க வைத்து விட்டேன். தப்பா ஒண்ணும் நினைக்காதே வெங்கிட்டு!"

'திறந்த உள்ளத்துடன் பேசும் பழைய நண்பனாகத்தான் இன்னும் இருக்கிறான். பப்படப் பிச்சையைப் பணம் மாற்றிவிடவில்லை' என்பதை உணர்ந்து மிகுந்த இன்பமடைந்தேன்.

"உன்னுடைய ஆபீஸ் நேரத்திலே காத்திருக்க வேண்டி நேர்ந்தால் அதில் தப்பு ஒன்றும் இல்லே பிச்சை. நான் வந்த காரியத்தைச் சொல்கிறேன் கேள். இந்தக் குழந்தைக்கு வேலை வேண்டும். பெயர் மல்லிகா. இவள் சம்பாதித்துத்தான் ஒரு பெரிய குடும்பம் உயிர் வாழணும்...."

விடாமல் மடமடவென்று சிதம்பரத்தின் குடும்ப நிலையை எடுத்துச் சொன்னேன். கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்த அவனது கண்களில் சில சமயங்களில் நீர் தளும்பியதை நான் கவனித்தேன்.

பிச்சை மல்லிகாவிடம் சில கேள்விகள் கேட்டான். அவள் தெளிவாகவும் இனிமையுடனும் சொன்ன பதில்கள் அவனைப் பெரிதும் கவர்ந்தன எனத் தோன்றியது.

''மல்லிகா, நீ ஒரு நிமிஷம் வெளியே இரும்மா!'' என்று அவளை வெளியே போகச் சொல்லி விட்டுப் பப்படப் பிச்சை என்னிடம் சொன்ன சமாசாரம் என்னைப் பிரமிக்க வைத்தது.

''வெங்கிட்டு, என்ன பதில் சொல்லாமல் உட்கார்ந்திருக்கே? அவளுடைய தாயாரிடத்திலே சம்மதத்தைக் கேளு! அந்தக் குடும்பத்தின் கஷ்டம் கட்டாயம் முடிந்துவிடும். எனக்கும் ஒரு வாழ்க்கைத் துணை கிடைக்கும். என் அம்மா அடிக்கடி எழுதுகிற கடிதத்துக்கு ஒரு முடிவான பதில் கிடைக்கும். கேட்டு முடியுமானால் நாளைக்கே எனக்கு அவர்களது சம்மதம் உண்டா இல்லையா என்று தெரிவிக்கிறாயா?''

அவனது விருப்பத்துக்கு ஒப்புக்கொண்டு அவன் அறையை விட்டு வெளியே வந்தேன். மல்லிகாவின் விழிகள் மிகுந்த ஆர்வத்துடன் என்னை நோக்கின. அவளுடைய பார்வையில் வேலை உண்டா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ளத் துடித்தது ஆசை.

அந்தக் குழந்தையிடம் பப்படப் பிச்சை கேட்டதைச் சொல்ல எனக்கு வெட்கமாக இருந்தது. ''போகலாம் வா!'' என்ற சொல்லோடு அவளை வீட்டுக்குத் திரும்ப அழைத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டேன்.

நாங்கள் இருவரும் என் வீட்டை அடைந்தபோது ஏற்கனவே மல்லியின் தாயார் அங்கு வந்து காத்திருந்தாள். என் மனைவி அன்பு பொங்கும் குரலில் மல்லியின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு ''என்னடி மல்லி, காயா, பழமா?'' எனக் கேட்டாள்.

''மாமாவைக் கேளுங்கள். எனக்குத் தெரியாது!'' என்று பணிவோடு சொல்லிவிட்டு என் முகத்தை ஆவலோடு பார்த்தாள்.

''லட்சுமி! நீ கொஞ்சம் இப்படி வா!'' என் மனைவி எனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்தாள். அவள் முகம் என்னிடமிருந்து வேலை கிடைத்துவிட்டது என்பதற்கு அறிகுறியாக எந்த வார்த்தையும் அது வரையில் வராதது கண்டு சட்டென வாடிவிட்டது.

''என்ன ஆச்சுன்னு சீக்கிரம் சொல்லுங்கோ!''

''ஆகிறது என்ன, வேலை கிடைக்கல்லே. ஆனால் வேலைக்கு அவசியம் இருக்குமா, தெரியலே!'' என்றேன்.

''என்ன புதிர் போடுகிறீர்கள்? சரியாகச் சொல்லுங்கள். பாவம், அம்மாவும் பெண்ணும் காத்திண்டு நிக்கறா'' எனப் பரபரத்தாள் லட்சுமி.

அவளிடம் பப்படப் பிச்சையின் விருப்பத்தைத் தெரிவித்தேன். மல்லியையும் அவள் தாயாரையும் கேட்டுச் 'சம்மதந்தானா' என்பதைத் தெரிவிக்கச் சொன்னேன். நான் இரகசியமாகப் பேசி முடித்த மறுகணம் லட்சுமி ஆனந்தத்தால் துள்ளினாள்.

''ஏண்டி போக்கிரி? வேலை கேட்கப் போறேன்னு போய் ரெண்டே நிமிஷத்துலே அந்தப் பயலை மயக்கிக் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணிண்டு வந்துட்டயே! கேட்டேளா, மாமி! எல்லாச் செலவும் போட்டுக் கல்யாணத்தை நான் நடத்திக்கிறேன். அவாளுக்குச் சம்மதமா கேளுங்கோன்னு இவர் காலிலே விழுந்துட்டான் பிச்சை! படு கைகாரிடி, என் மல்லிக் கண்ணு!'' என்று பேசிக்கொண்டே ஓடி மல்லியை அணைத்துக் கொண்டாள் லட்சுமி.

மல்லியின் தாயார் மலைத்து நின்றாள். கனவல்ல, நிஜந்தான் என்று ஞாபகப்படுத்தும் வகையில், ''பிச்சைக்கு வயசு முப்பத்தொன்று இருக்கும். கொஞ்சம் வயசு வித்தியாசம் அதிகந்தான். ஆனால் யோக்கியமானவன். நன்றாக வைத்துக் கொள்வான் பெண்ணை. உங்கள் சம்மதமும், மல்லியின் இஷ்டமும் இருந்தால் ஏற்பாடுகள் செய்ய வேண்டியதுதான் பாக்கி. இந்தக் குடும்பத்தைக் காப்பாற்ற நான் பொறுப்பு என்கிறான் அவன்!'' என்றேன்.

கூழுக்கு உப்பில்லை என்று அழுகிறவர்களுக்குப் பாலும் சர்க்கரையும் கிடைத்தால் வேண்டாம் என்று சொல்லுவார்கள்? மல்லிகாவை அடுத்த மாதமே பப்படப்பிச்சை திருமணம் செய்து கொண்டான். லட்சுமியும் நானும் முன்னின்று எல்லாவற்றையும் நடத்திக் கொடுத்தோம். வார்டன் ரோடில் இருந்த தனது இல்லத்துக்கே மல்லியோடு கூடச் சிதம்பரத்தின் குடும்பத்தில் உள்ள மற்றவர்கள் அனைவரையும் பப்படப்பிச்சை அழைத்துக் கொண்டு போய்விட்டான்.

மல்லிகாவின் வாழ்க்கைத்தரம் மாறினாலும் மனோபாவம் மாறாமல் இருந்தது மகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது. வாரத்துக்கு ஒரு முறையாவது காரில் வந்து லட்சுமியிடம் ஒரு மணிக்குக் குறையாமல் உட்கார்ந்து, 'மாமி, மாமி!' என்று முன்பு போலவே கொஞ்சிப் பேசிவிட்டுப் போகிறாள் மல்லி. அப்படி அவள் சமீபத்தில் ஒரு முறை வந்தபோது அவளோடு பப்படப்பிச்சையும் வந்திருந்தான்.

''என்னப்பா பிச்சை! சௌக்கியமாயிருக்கிறாயா? வியாபாரமெல்லாம் எப்படி?'' என்று விசாரித்தேன்.

''ரொம்பப் பிரமாதமாக நடக்கிறது. உன்னிடம் சொல்லலையே வெங்கிட்டு! மல்லி வந்தது முதல் என்னோடு வேலை செய்ய ஆரம்பித்து விட்டாள். கொஞ்ச நாட்களாக அவள் என்னுடைய பார்ட்னர். அவளுடைய சாமர்த்தியத்தில் பாதிகூட எனக்குக் கிடையாது! நான் அதிகமாகச் சொன்னால், நீ என்னை 'பெண்டாட்டிப் பித்து' என்று தப்பாய் நினைப்பாய். அவள் உத்தரவு இல்லாமல் எதுவும் நடக்கிறதில்லை இப்போ!'' என்று மல்லியின் புகழ் பாடினான் பிச்சை. அதைக் கேட்க எனக்கு இன்பமாக இருந்தது. என்னை அறியாமலே என் வாழ்க்கையிலே நான் ஏதோ ஒரு பெரிய சாதனை புரிந்து விட்டது போன்ற எண்ணம் மேலோங்கி என் நெஞ்சை நிமிர்த்தியது!

# குழந்தைகளுக்கான அமுல் பாலுணவு
# கறந்த பாலிலிருந்து தயாரிக்கப்பட்டது







உடல்நலம் தருவது
கறந்த பால்!
இத்தகைய பாலிலிருந்து
தான் அமுல் பாலுணவு
தயாரிக்கப்படுகிறது. இது
ஆசியாவிலேயே மிகப்
பெரியதும், மிகவும் நவீன
சாதனங்களைக்கொண்டதுமான
ஆனந்திலுள்ள அமுல் பால்
பண்ணையில் தயாரிக்கப்படுகிறது.
எளிதில் ஜீரணிக்கத்தக்க
வைட்டமின்களும் தாதுப் பொருட்
களும் கலக்கப்பட்டுள்ள பால்தான்
அமுல் பாலுணவு. ஆரோக்கியத்
திற்கும் வளர்ச்சிக்கும் மிகச் சிறந்தது.
ஆயிரக்கணக்கான குழந்தைகள்
அமுல் அருந்தி செழிப்புடனிருப்பதில்
ஆச்சரியமே இல்லை.








ஸ்ரீரங்கம் நரசிம்மன்

அப்பொழுதுதான் வந்து நின்ற தூத்துக்குடி எக்ஸ்பிரஸிலிருந்து இறங்கிய துரையும் அவன் மனைவி ராஜியும் எழும்பூர் ஸ்டேஷனை விட்டு வெளியில் வந்தார்கள். அவர்கள் பெட்டி படுக்கையை எடுத்து வந்த போர்ட்டர் டாக்ஸி நிற்கும் இடத்தை நோக்கி நடந்தான். மூன்று வருஷங்களுக்கு முன்பானால் துரை எங்காவது வெளியூர் சென்று திரும்பினால் குறிப்பிட்ட வண்டிக்கு அவனுடைய சொந்தக் கார் வந்து தயாராகக் 'காத்திருக்கும். இப்பொழுது டாக்ஸிக்காக க்யூவில் நிற்கும்படியாயிற்று.

சுமார் இருபது பேருக்குக் கிடைத்த பிறகுதான் துரையின் முறை. போர்ட்டர் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

"உங்கள் சிநேகிதர் யாருக்காவது எழுதி யிருந்தாலும் கார் அனுப்பியிருப்பார்கள்" என்றாள் ராஜி. எதற்கும் காத்திருந்து பழக்கமில்லாத காரணத்தால் ஏற்பட்ட அலுப்பில் கூறினாள். துரைக்கும் எப்படா டாக்ஸி கிடைத்து வீட்டை அடையப் போகிறோம் என்றிருந்தது.

இருபது நிமிஷத் தவத்துக்குப் பிறகு ஒரு வழியாக அவர்களுக்கான டாக்ஸி வந்து நின்றது. பெட்டி படுக்கையை வண்டியின் பின்னால் வைத்து விட்டுத் தன் கூலியை வாங்கிச் சென்றான் போர்ட்டர். துரையும் ராஜியும் ஏறிக் கொண்டார்கள். டிரைவர் மீட்டரைத் தட்டி விட்டுப் பின்னால் திரும்பிப் பார்த்தான்.

"சாந்தோம்!" என்றாள் ராஜி. டாக்ஸி நகர்ந்தது. துரை உற்சாகமின்றி உட்கார்ந்திருந்தான்.

"நீங்கள் என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று சொல்லட்டுமா?" என்றாள் ராஜி.

என்னவென்று கேட்கும் பாவனையில் அவளைப் பார்த்தான் துரை.

"மூன்று வருஷங்களுக்கு முன்பானால் ஸ்டேஷனுக்கு நம் காரே வந்திருக்கும்; இப்பொழுது டாக்ஸியில் போக வேண்டியிருக்கு...." என்றாள். துரையின் உதட்டில் மெல்லிய புன்னகையொன்று நெளிந்தது. "சொன்னது சரிதானா?" என்றாள்.

"இப்பொழுது மட்டும் யாருடைய வண்டியில் போய்க் கொண்டிருக்கிறோம் என்று நினைக்கிறாய்?" என்றான் துரை.

"அப்படின்னா?"

"இப்பொழுதும் நம் வண்டியில்தான் போய்க் கொண்டிருக்கிறோம்! அதோ நம்பரைப் பார்!"

"இது நம் வண்டியா?" ஆச்சரியத்துடன் கேட்டாள் ராஜி.

"சாட்சாத் நம் 'பியட்' வண்டிதான். 3333 நம்பரைக்கூடவா கவனிக்கவில்லை?"

ராஜி வியப்பு மேலிட்டவளாய், "அதிசயமாயிருக்கே......" என்றாள்.

"அதிசயமாகத்தான் இருக்கு... இவ்வளவு பேர் நிற்கையில் நமக்கென்று வந்ததே!..." என்றான் துரை.

"நீங்கள்தான் இதை ஒழிக்கக் கட்டணும்னு ஒத்தைக் காலில் நின்று விற்று விட்டீர்கள்.... பாவம், நன்றி மறக்கவில்லை......"

ராஜியின் குரலில் வருத்தம் தொனித்தது.

"என்னவோ அப்போதிருந்த மனநிலை அப்படி.... நான் படித்த கதையும், பார்த்த காட்சியும், கண்ட கனவும் என்னை ரொம்பவும் பயமுறுத்தி விட்டன; இந்த வண்டியை யாருக்காவது தானம் கொடுத்தாவது நம்மை விட்டு விரட்டினால் போதும் என்று எண்ணினேன்......"

"இந்த வண்டி இருக்கும் வரையில் நாம் அடிக்கடி 'டூர்' கிளம்பி விடுவோமே...."

"வழியில் என்றாவது மக்கர் செய்திருக்கணுமே!" என்று அந்த வண்டியிடம் தனக்குள்ள வாஞ்சையை

வெளியிட்டான் துரை. ''வண்டியைக் கொடுக்க வேண்டாம் என்று எவ்வளவோ முட்டிக் கொண்டேன்.... இப்பொழுதாவது இதைத் திரும்பவும் வாங்கிவிடப் பாருங்களேன்.....'' என்று கெஞ்சாக் குறையாக வேண்டினாள் ராஜி.

துரைக்கும் அந்த வண்டியை விற்றுவிட்டதைக் குறித்து அப்பொழுது மிகவும் வருத்தமாகத்தான் இருந்தது. அது அவன் வசமிருந்த காலத்தில் அவர்கள் நினைத்த போதெல்லாம் திருப்பதி, திருத்தணி, மஹாபலிபுரம் என்று அடிக்கடி 'குஷாலாக'க் கிளம்பி விடுவார்கள். 'என் வண்டி பெட்ரோல் இல்லா விட்டாலும் தண்ணீரைக் குடித்து விட்டாவது இடம் போய்ச் சேருமே தவிர, பாதி வழியில் நிற்காது' என்று துரை அடிக்கடி அந்தக் காரைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்வான்.

அப்படிப்பட்ட வண்டியை இந்த க்ஷணம் விற்றால்தான் ஆயிற்று என்று ஒரே பிடிவாதமாய் நின்று மிகவும் குறைந்த விலைக்கு யாருக்கோ கொடுத்து விட்டான்.

பண முடையால் விற்கவில்லை!

பயப் பிராந்தியால் விற்று விட்டான்!

அப்பொழுது தனக்கும் 'டிரைவிங்' சொல்லித் தருமாறு கேட்டுக் கொண்டிருந்தாள் ராஜி. நாளுக்கு நாள் அவள் தொந்தரவு அதிகமாகிக் கொண்டிருந்தது. 'நீங்கள் சொல்லித் தராவிட்டால் நான் யார் மூலமாவது கற்றுக் கொண்டு விடுவேன்...' என்று பயமுறுத்திக் கொண்டிருந்தாள். ராஜிக்கு டிரைவிங் சொல்லித் தருவது அவ்வளவு உசிதமாகப்படவில்லை துரைக்கு. பல காரணங்களால் அதில் அவனுக்கு விருப்பமில்லை; 'சொல்லித் தருகிறேன்' என்று நாளைக் கடத்திக் கொண்டிருந்தான். ராஜி நச்சரித்துக் கொண்டிருந்தாள். அப்படியிருக்கையில் ஒரு நாள் கதை படித்தான். அந்தக் கதையின் கதாநாயகன் ஒரு கார் டிரைவர்; அந்த டிரைவருக்கு ஒரு நாள் தான் கார் ஓட்டிக் கொண்டிருக்கையில் தன் கார் இன்னொரு காரோடு மோதி விபத்து ஏற்படுவது போல ஒரு தோற்றம் உண்டாகிறது. அரை வினாடியில் அந்தப் பயங்கரத் தோற்றம் மறைந்து விடுகிறது. ஆனால் சற்றைக்கெல்லாம் உண்மையாகவே அந்தக் கார் இன்னொரு காருடன் மோதி டிரைவர் ஸ்தலத்திலேயே உயிரை இழக்கிறான். இந்தக் கதையைப் படித்ததும் துரையின் மனம் 'திக்திக்' கென்று அடித்துக் கொண்டது. அன்றைக்கு அவன் வண்டியை எடுக்கையில் கைகால்கள் இலேசாக நடுங்கின. வழக்கத்தைவிட மெதுவாகவே போய்க் கொண்டிருந்தான். வழியில் பயங்கரமான ஒரு காட்சியைக் கண்டான். ஒரு கார் ஒரு மரத்தின் மீது மோதி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தது. அதன் டிரைவரை வெளியில் எடுப்பதற்குப் பலர் முயன்று கொண்டிருந்தார்கள். மேற்கொண்டு எங்கும் போகாமல் வண்டியை வீட்டுக்குத் திருப்பினான். அன்று சாப்பிட்டுப் படுக்கும் வரையில் அவன் மூளை குழம்பிக் கொண்டிருந்தது. படுத்து வெகு நேரம் வரை தூக்கம் வரவில்லை. படித்த கதையும் பார்த்த காட்சியும் மாறி மாறி அவன் நெஞ்சைப் பிசைந்து கொண்டிருந்தன. ஒருவாறு அவன் தூங்கினான். கனவிலும் கார் வந்தது!

துரை காரில் எங்கோ போய்க் கொண்டிருக்கிறான். வழியில் நடு ரஸ்தாவில் ஒரு கூட்டம். காரை நிறுத்தி விட்டு இறங்கிச் சென்று என்னவென்று போய்ப் பார்க்கிறான். ஒரு குழந்தை ரத்த வெள்ளத்தில் பிணமாகக் கிடக்கிறது. கூடியிருக்கும் ஜனங்கள் வாய்க்கு வந்தபடி கூச்சலிடுகிறார்கள். ''டிரைவரை விடாதே! பிடி!'' என்று இரண்டொருவர் ஆத்திரத்துடன் கூற ஆவேசம் வந்தவர்கள்போல ஒரு சிலர் சிறு தூரத்தில் நின்று கொண்டிருந்த ஒரு காரை அணுகி அதன் கதவைத் திறக்கிறார்கள்; டிரைவரின் இடத்திலிருந்து ராஜி கீழே இறங்குகிறாள்!

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து விட்டான் துரை. தான் கண்டது கனவுதான் என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளப் பல நிமிஷங்கள் ஆயிற்று. உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை ஓர் உலுப்பு உலுப்பி விட்டது அந்தக் கனவு. ராஜிக்கு டிரைவிங் சொல்லித் தரக் கூடாது என்பதை உறுதிப் படுத்திக் கொண்டான். 'உங்களுக்குத் தெரியாமலே யார் மூலமாவது கற்றுக் கொண்டு விடுவேன்' என்று ராஜி கூறிக் கொண்டிருந்தது அவன் கவனத்துக்கு வந்தது.

கார் இருந்தால்தானே?

அதை விற்று விடுவது என்று தீர்மானித்தான். அது தன் வீட்டிலிருக்கும் ஒவ்வொரு வினாடியும் ஆபத்து நெருங்கிக் கொண்டிருப்பதைப் போல் ஒரு பிரமை. வண்டியை விலை பேசி விற்காவிட்டாலும் பரவாயில்லை; எங்காவது கண்காணாத இடத்தில் கொண்டு விட்டு விட்டு வந்து விடலாமா என்று பறந்தது மனம். அவசர அவசரமாக யாரோ ஒரு ப்ரோக்கரைப் பிடித்தான். அவன் பத்தாயிரம் ரூபாய்க்கு விற்றுக் கொடுத்தான். நிதானமாக விற்றிருந்தால் யாரும் கண்ணை மூடிக் கொண்டு பதினைந்தாயிரம் ரூபாய் கொடுத்திருப்பார்கள்! பணத்தைப் பற்றித் துரை கவலைப்படவில்லை. தனக்கு நேர இருந்த ஒரு பயங்கரத்திலிருந்து தப்பி விட்டதாக ஒரு நிம்மதி அடைந்தான்.

பிறகு ஒரு வாரத்துக்கெல்லாம் அவனுடைய சொந்த ஊரான மதுரைக்குப் போய் விட்டான். அவனுடைய சொத்துக்கள் முழுதும் அங்குதான் இருந்தன. அதில் ஏதோ கோர்ட்டு விவகாரம் ஏற்படவே அந்த வழக்கு முடியும் வரை சுமார் ஆறு மாதங்கள் மதுரையிலேயே தங்குவது என்று மனைவியுடன் சென்றான்.

அந்த விவகாரம் ஆறு மாதங்களில் முடிவதாயில்லை. மூன்று வருஷங்களாயின. இப்பொழுதுதான் மீண்டும் அவர்கள் சென்னை வருகிறார்கள்!

மூன்று வருஷங்களுக்கு முன்பு யாருக்கோ விற்று விட்ட அவர்களுடைய வண்டி பல கைகள் மாறி ஊருக்கு உழைப்பதென்று மஞ்சள் பூசிக் கொண்டு அவர்களையே ஏற்றிச் செல்லத் தயாராக வந்து நின்றது.

வண்டியில் உட்கார்ந்திருந்த துரையின் மனம் 'அவசரப்பட்டு விற்று விட்டோமோ?'

# கால்கேட் பேபி பவுடர்

## மிக நேர்த்தியானது ...பெரிய டப்பாகூட

அவ்வளவு அதிக இதமளிப்பது.
அவ்வளவு அதிக மணமுள்ளது.
குழந்தையின் இளஞ் சருமத்திற்கு
மிகவும் உகந்தது



அதிகப் பவுடர்
அதிகச் சிக்கனம்

New
COLGATE
BABY
POWDER

CBP.6.5.TAM

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

## ரத்தத்திலுள்ள அசுத்தங்களை

அகற்ற உதவுகிறது அது.

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கொலஸ் (N) தயாரிப்பு

KS. G. 6

என்று எண்ண மிட்டது. "எப்படியாவது இந்த வண்டியைத் திரும்பவும் வாங்கிவிடுங்கள்!... இந்த வண்டி நம்மை விட்டுப் போனது முதல் நமக்கும் ஏதேதோ கஷ்டங்கள்! கொஞ்ச காலம் ஊரை விட்டே போகும்படியாகி விட்டது" என்றாள் ராஜி.

"நம்ம வண்டிங்களா இது?" என்றான் டிரைவர்.

"எங்க வண்டிதான் இது....." என்றாள் ராஜி.

"ரொம்ப அதிருஷ்ட வண்டிங்க.....! ரெண்டு வருஷத்துக்கு முந்தி எங்க முதலாளி இந்த வண்டியை வாங்கினாரு.....இது வந்த வேளை இப்ப அவருக்கு ஆறு டாக்ஸி ஓடுது....." என்றான் டிரைவர்.

"பார்த்தீர்களா ?..... இவ்வளவு ராசியான வண்டியை இழந்து விட்டு நிற்கிறீர்களே!" என்று அங்கலாய்த்தாள் ராஜி.



"எலெக்டிரிக் பேன் காத்து வாங்கிட்டே சமையல் செஞ்சு வை, இந்த விறகு எல்லாம் வித்துட்டுச் சீக்கிரம் வந்துடறேன், கண்ணம்மா!"

"இந்த வண்டியை நமக்குப் பேசி முடிவேன் டிரைவர்!......" என்றான் துரை.

"முதலாளி இதைக் கொடுக்க மாட்டாருங்களே! இதைத் தெய்வமா எண்ணிச் சுத்திச் சுத்தி வருவாருங்க..." என்றான் டிரைவர்.

"எப்படியாவது முயற்சி பண்ணேன். விலையைப் பத்தி யோசிக்க வேண்டாம். உனக்கும் நல்ல கமிஷன் தரேன்!....." என்றான் துரை.

"என் பேச்சு ஏறாதுங்க...எதுக்கும் ஓர் ஆளை அனுப்பறேன். கஜபதின்னு பேரு. கார் புரோக்கர். அவன் பேசிப் பார்த்தால் நடக்குமோ என்னவோ ?" என்றான்.

அதற்குள் சாந்தோமில் அவர்கள் வீடு வந்து விட்டது. வண்டியை விட்டு இறங்கி மீட்டர் சார்ஜுக்கு அதிகமாகவே ஒரு ரூபாய் கொடுத்து விட்டு, "கஜபதியை எப்ப அனுப்பறே?" என்றான் துரை. "மத்தியானத்துக்குள்ளே வரச் சொல்றேனுங்க..." என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

சரியாகப் பதினொரு மணிக்கு வந்தான் கஜபதி. தனக்கு அந்த வண்டியை எப்படியாவது வாங்கித் தருமாறு வேண்டினான் துரை. முயற்சி செய்து பார்ப்பதாகக் கூறிச் சென்ற கஜபதி மூன்று மணிக்கு மறுபடியும் வந்தான். "உங்களுக்கு வேறு வண்டி முடிச்சுத் தரேனுங்க...நல்ல நல்ல வண்டி புது வண்டி கெல்லாம் இருக்கு..... விலையும் சல்லிசாப் பேசி முடிக்கறேன்..." என்றான்.

"வேறு வண்டி வாங்கறதாயிருந்தா மவுன்ட்டிலேயே புது வண்டி வாங்க மாட்டேனா? இது என்ன ஆச்சு?....." என்றான் துரை.

"அவர் மசிஞ்ச வரவழியா தெரியலிங்க...ரொம்ப தூரம் சொன்னதுக்கப்புறம் பன்னிரண்டு ரூபா கேக்கறாருங்க..."

"பன்னிரண்டாயிரமா? நான் பத்தாயிரத்துக்குத் தானே கொடுத்தேன்! இரண்டு வருஷம் டாக்ஸியா வேறே ஓடியிருக்கு" என்றான் துரை.

"அதுக்குத்தானுங்க வேறே வண்டி பார்க்க வாண்ணேன்......."

துரை சிறிது யோசித்தான். பிறகு, "சரி; நீ போய் வண்டியைக் கொண்டு வா. பன்னிரண்டு ரூபாய்க்கு என் பெயருக்கு விற்று விட்டதாக ஒரு விற்பனைச் சீட்டு எழுதி வாங்கிக் கொண்டு வா......." என்றான்.

"ரொம்ப சிரமப்பட்டிருக்கேனுங்க. கவனிச்சுக்குங்க..." என்று கூறிக் கொண்டு சென்றான்.

சுமார் ஒரு மணி நேரத்துக்கெல்லாம் துரையின் வண்டி அவன் வீட்டு வாசலில் வந்து நின்றது. காலையில் ஸ்டேஷனிலிருந்து ஓட்டிவந்த டிரைவர்தான். கஜபதி விற்பனைச் சீட்டைத் துரையிடம் கொடுத்தான். துரை தயாராக எழுதி வைத்திருந்த செக்கைக் கஜபதியிடம் கொடுத்து விட்டு அவனுக்கென்று தனியாக ஏதோ பணம் கொடுத்தான். டிரைவர் வருத்தத்துடன், "எனக்குத்தாங்க வேலை போச்சு..." என்றான் வண்டியைச் சுற்றிச்சுற்றி வந்தபடியே.

துரைக்கு அவனைப் பார்க்க மிகவும் வருத்தமாயிருந்தது. அவனுக்கும் உள்ளே சென்று எடுத்துக்கொண்டு வந்து நூறு ரூபாய் பணம் கொடுத்தான்.

கஜபதியும் டிரைவரும் விடைபெற்றுக் கொண்டு துரையின் வீட்டைத் தாண்டிச் சிறிது தூரம் வந்ததும், "நிஜம்மாவே இது அவ்வளவு அதிருஷ்ட வண்டியா அண்ணே?" என்றான் கஜபதி. டிரைவர் பின்னால் திரும்பிப் பார்த்து விட்டு, "இரண்டு வருஷங்களுக்கு முந்தி இதை எட்டு ரூபாய்க்கு வாங்கினேன். இரண்டு வருஷங்களில் நிறையச் சம்பாதிச்சேன். வாங்கியிருந்த கடனை அடைச்சேன். இந்த வண்டியிடம் அவர்களுக்கிருந்த ஆசையைத் தெரிஞ்சுக்கிட்டேன். வண்டி என்னுடையது என்றால் இந்த விலைக்கு விற்க முடியாது. அதற்காக இதன் முதலாளி வண்டியைக் கொடுக்க மாட்டாரென்று பொய்யாகக் கூறி, வண்டிக்கு ஒரு கிராக்கி உண்டு பண்ணினேன். வண்டியைப் பத்தியே எதுவும் தெரியாத உன்னைப் புரோக்கராக்கினேன்.....என் வரையில் இது அதிருஷ்ட வண்டிதானே?" என்றான்.

துரையும் ராஜியும் வண்டியை முன்னும் பின்னும் தொட்டுத் தொட்டுப் பார்த்து விட்டு, "நம்முடைய அதிருஷ்டம்தான், இந்த வண்டி திரும்பவும் நமக்கே வந்தது!" என்று சொல்லிக் கொண்டனர்.

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

